# கம்பர் யார்?

டாக்டர் மா. இராசமாணிக்கனார்
M. A., L. T., M. O. L., Ph. D.
தமிழ்த் துணைப் பேராசிரியர்
சென்னைப் பல்கலைக் கழகம்.

சாந்தி நூலகம்
2/122, பிராட்வே • சென்னை-1.

# முகவுரை

கம்பர் யார் ? இக்கேள்விக்கு விடையளிப்பதே இந்நூலின் நோக்கமாகும். கம்பர் தமிழர் ; கற்றறிந்த மேதை ; உலகியல் அறிவிற் சிறந்தவர் ; தம் காலத்திற்கு முன்பு தோன்றிய சங்க நூல்களையும், சமய நூல்களையும் பழுதறக்கற்ற பண்டிதர் ; பல கலைப் புலமை நிறைந்தவர் ; அரசியல் நுட்பம் வாய்ந்தவர் ; உள நூற் புலமை மிக்கவர் ; மக்கள் வாழ்விலும், இல்லற வாழ்விலும், மக்கட் பேற்றிலும் திளைத்தவர். இவ்வாறு கல்வியிலும் உலகியல் அறிவிலும் எல்லா நலத்துறைகளிலும் சிறந்த தமிழர் கம்பர் என்பதை விளக்குதலே இந்நூற் கட்டுரைகளின் நோக்கமாகும்.

கதைக்காகப் படிப்போர் படிக்கட்டும் ; வரலாற்றுக்கென ஆராய்வோர் ஆராய்க ; நமக்குக் கம்பர் உள்ளமே தேவை. அவர் புலமையையும் அநுபவ மொழிகளையும் அறிந்து மகிழ்வதே நமது செயல்.

அவர் திருப்பெயர் வாழ்க !

மா. இராசமாணிக்கனுர்

# உள்ளுறை

# 1. கம்ப ராமாயணம்

## இராமாயண நூல்கள்

இந்திய மொழிகள் அனைத்திலும் இராமாயண வரலாறு எழுதப்பட்டுள்ளது. சமணர் பிராக்ருத மொழியிலும், வட மொழியிலும், கன்னட மொழியிலும் இராமாயண நூல்கள் பலவற்றை எழுதியுள்ளனர். பௌத்தர் பிராக்ருத மொழியில் இராமகாதையை வரைந்துள்ளனர். இந்துக்கள் வடமொழியிலும் தமிழ் தெலுங்கு முதலிய பிற மொழிகளிலும் இராமாயணத்தை வெளியிட்டுள்ளனர்.

கி. மு. முதல் அல்லது கி. பி. முதல் நூற்றாண்டில் விமலசூரி என்பவர் இராமகாதையை 'பௌம சகியம்' என்னும் பெயரில் எழுதியுள்ளார். அவருக்குப் பின்பு சௌமியன் சுவயம்புவன் என்பவர் சில வேறுபாடு களுடன் இராமகாதையை எழுதியுள்ளார். குணபத்திரா சார்யன், இரவிசேனன், தேவசந்திரன், பிரவரசேனன் என்னும் சமண ஆசிரியர்கள் இராமாயணத்தை எழுதி யுள்ளனர். இவை பிராக்ருத மொழியில் எழுதப்பெற்ற

இராமாயண நூல்களாகும். 'புத்த சாதகக் கதைகள்' என்னும் வரிசையில் 'தசரத சாதகம்,' 'சாம சாதகக் கதை,' 'வெஸ்ஸந்தர சாதகம்,' 'சம்புல சாதகம்,' 'லங்காவதார சூத்திரம்' என்பவை இராமாயண வரலாற்றைக் கூறுவன. இவை பிராக்ருத மொழியில் பௌத்தரால் எழுதப் பெற்றவை.

இரவி சேனன் கி. பி. 7-ஆம் நூற்றுண்டினர். இவர் மகா இராமாயணம் என்னும் நூலை எழுதியுள்ளார். ஹேமசந்திரன் கி. பி. 12-ஆம் நூற்றுண்டினர். இவர் 'திரி சஷ்டி சலாகா புருஷ சரிதம்' என்னும் நூலில் இராமகாதையை வழங்கியுள்ளார். கி. பி. 16-ஆம் நூற்றுண்டில் வாழ்ந்த தேவ விஜயர் என்பவர் 'இராம சரிதம்' என்னும் நூலை உரை நடையில் எழுதியுள்ளார். இம் மூன்றும் சமணரால் வட மொழியில் வெளியிடப் பெற்ற இராமாயண நூல்கள்.

இந்துக்களால் வட மொழியில் எழுதப்பட்ட இராமாயண நூல்கள் பலவாகும். அவற்றுள் சவன இராமாயணம், வால்மீகி இராமாயணம், வசிட்ட இராமாயணம், ஆனந்த இராமாயணம், அத்யாத்ம இராமாயணம், லகு இராமாயணம், அற்புத இராமாயணம்,பாரத்வாஜ இராமாயணம்,சேஷ இராமாயணம், பால இராமாயணம், இரகுவம்ச இராமாயணம், போதாயன இராமாயணம்,அக்நிவேஸ்ய இராமாயணம், யோகவாசிட்ட இராமாயணம், சங்கிரக இராமாயணம், என்பன குறிக்கத்தக்கவை. இந்நூல்களுள் சவன இராமாயணம் என்பது வால்மீகிக்கு முற்பட்டது என்று அறிஞர் கூறுகின்றனர். இவ்வொவ்வொரு நூலிலும் இராமாயணச் செய்திகள் சில வேறுபாடுகளுடன் காணப்படுகின்றன.

சமணர் கன்னட மொழியில் எழுதியுள்ள இராமாயண நூல்கள் பல. அவற்றுள் பம்ப ராமாயணம்,

குமுதேந்து ராமாயணம், ஜைன ராமாயணம், இராம விஜய சரிதம், இராம கதாவதாரம், திரிசஷ்டி மகா புருஷ குண அலங்காரம், ஜீவ சம்போதனை என்பன குறிப்பிடத்தக்கன. ஆந்திர மொழியில் பாஸ்கர ராமாயணம் பெயர் பெற்றது.

தமிழ்ச்சங்க நூல்களில் இராமாயணச் செய்திகள் சில குறிக்கப்பெற்றுள்ளன. கி. பி. 11-ஆம் நூற்ருண்டில் செய்யப் பெற்ற யாப்பருங்கல விருத்தியுரையில் 'இராமாயண வெண்பா' என்னும் பெயர்கொண்ட நூல் ஒன்று இருந்தமை தெரிகிறது. கி. பி. 12-ஆம் நூற்ருண்டின் பிற்பகுதியில் கம்பர் இராமாயணத்தை விருத்தப்பாவில் பாடினுர்.

## வடமொழி இராமாயண நூல்கள்

இந்துக்கள் வரைந்துள்ள வடமொழி இராமாயண நூல்கள் இன்னவை என்பது மேலே கூறப்பட்டன. பதினெட்டுப் புராணங்களிலும், மகா பாரதத்திலும் அத்யாத்மராமாயணம், ஆனந்தராமாயணம் என்னும் நூல்களிலும் மகா விஷ்ணு இராமனுக வந்துபிறந்தமை குறிக்கப்பட்டுள்ளது; ஆயின் ஒவ்வொன்றிலும் பல வேறுபாடுகள் இடம் பெற்றுள்ளன.பத்ம புராணத்தில் உள்ள இராமனுடைய வாழ்க்கையும் செயல்களும் வால்மீகி இராமாயணச் செய்திகளுக்குப் பெரிதும் வேறுபடுகின்றன. அற்புதராமாயணத்திலும், வசிட்ட ராமாயணத்திலும் மிகுதியாகக் கூறப்பட்ட இராமனது வாழ்க்கை நிகழ்ச்சிகள் சில வால்மீகி இராமாயணத்தில் இடம் பெறவேயில்லை. அயோத்தியில் முடிசூடிக்கொண்ட பிறகு உண்டான இராமனது வரலாறு ஆனந்த இராமாயணத்தில் எட்டுக் காண்டங்களில் விரித்துரைக்கப்பட்டுள்ளது. இராம பண்டிதர் உரை

யோடு கூடிய வால்மீகி இராமாயணத்தை மன்மதநாத டட் என்பவர் வெளியிட்டுள்ளார். அதில் கூறப்பட் டுள்ள செய்திகள் தென்னிந்திய கிரந்த மொழியில் வெளியிடப்பட்டுள்ள வால்மீகி இராமாயணப் பதிப் பில் பற்பல வேறுபாடுகளுடன் காணப்படுகின்றன. பல செய்யுட்கள், பல அதிகாரங்கள் இவ்விரு நூல்களி லும் வேறுபடுகின்றன[1].

பிரமன் இராம காதையை நூறு கோடி சுலோகங் களால் செய்து நாரதர்க்கும் ரிஷிகட்கும் போதித்தான். அது ஒன்பது லட்சம் காண்டங்களையும் தொளாயிரம் லட்சம் படலங்களையும் நூறு கோடி சுலோகங்களை யும் கொண்டது. தேவர், தைத்தியர், நாகர் அந் நூலைப் பெறப் பூசலிட்டனர். விஷ்ணு அந்நூலை மூன்றாகப் பிரித்து அம்மூவர்க்கும் கொடுத்தான் என்பது வரலாறு.[2]

நாரதன் வால்மீகிக்குச் சொன்னது ரகு ராமாய ணம் ஆகும். சிவன் பார்வதிக்குச் சொன்னது ஆனந்த ராமாயணம் என்பது. அது ஒன்பது காண்டங்களை யும் 109 படலங்களையும் 12,252 செய்யுட்களையும் கொண்டது. அத்யாத்ம ராமாயணம் என்பது பிரம் மாண்ட புராணத்தின் ஒரு பகுதியாகும். இது விசுவா மித்திரனால் கூறப்பட்டது. இதன்கண் காணப்படும் இராமனது வரலாறும் செயல்களும் தெய்வீக முறை யில் உயர்த்திக் கூறப்பெற்றுள்ளன. வான்மீகி பாரத் வாசர்க்குச் சொன்னது அற்புத ராமாயணம் எனப் படும். இதனில் இராவணனுக்கு ஆயிரம் தலைகள்

---

1. Valmiki Ramayanam, Translated by C. R. Srinivasa Iyengar, Preface, pp. 11-12.
2. Ibid, pp. 2-3.

இருந்தமை கூறப்பட்டுள்ளது. இந்நூல் இருபத்தேழு அதிகாரங்களை உடையது. இருக்கு வேதத்திலிருந்து 156 சுலோகங்கள் தேர்ந்தெடுக்கப் பெற்று, அவை இராமாயண நிகழ்ச்சிகட்கு அடிப்படை என்று இலக்கு மண ஆர்யா என்பவரால் எழுதப் பெற்றது. நாரதர் இச் சுலோகங்களை வால்மீகிக்கு விளக்கினர். வால்மீகி இவற்றின் உதவியால் இராமாயணம் பாடினர் என்பது வரலாறு.[3]

### பௌத்த இராமாயண வேறுபாடுகள்

"தசரத சாதக"த்தில் இராவணனைப்பற்றிய பேச்சே இல்லை. தசரதனுக்குப் பதினுயிரம் மனைவியர் இருந்தனர். இராமனும் சீதையும் ஒரு தாய் மக்கள். அவர்கள் காடேகி மீண்ட பிறகு மணந்துகொண்டனர். இங்ஙனம் ஒரு தாய் வயிற்றில் பிறந்த ஆணும் பெண்ணும் ஒருவரையொருவர் மணந்துகொள்ளுதல் புத்தர் பிறந்த சாக்கிய மரபிற்கு உரியது. புத்தர் அவதாரங்களுள் இராமாவதாரம் ஒன்று.[4]

## சமணர் இராமாயணச் செய்திகள்

### விமலசூரி இராமாயணம்

இராவணன் இரத்தினஸ்வரனுக்கும் கைகேயிக்கும் பிறந்தான்-இந்திரன் வமிசத்தவன்-அருளே வடிவான சமணன்-செங்கோலன்-தன்னைக் காதலித்த நளகூபரன் மனைவிக்கு அறிவுரை புகன்றவன்-சந்திரநகி-சூர்ப்பநகை-இவள் மகனை இலக்குவன் கொன்றான்-

---

3. Ibid, Int. pp. 76-78.
4, D. L. Narasimmachari's Preface to "Pampa Ramayana Sangraham" (Mysore University)

கணவன் கரதூஷணன்-இராவணன் கேட்டு இலக்கு வனை எதிர்க்க வந்தான்-சீதையைக் கண்டு காதல் கொண்டு இலக்குவன் போலச் சிம்மநாதம் செய்தான்-இராமன் உதவிக்கு வந்தான்-வானரர் குரங்குக் கொடியினர்-சமணர்-ஹநுமான், வருணனுடன் இராவணன் செய்த போரில் உதவி புரிந்தான்-வானரர் இராவணன் ஆட்சிக்கு உட்பட்டவர்-இராமன் சேனை விண்வழிச் சென்று கடல்தாண்டி இலங்கை சென்று சண்டையிட்டது முதலியன இந்நூலிற் குறிக்கப்பட்டுள்ளன. இந்தியாவிற்கும் இலங்கைக்கும் இடையில் பாலம் கட்டப்பெற்றமை கூறப்படவில்லை.

## குணபத்திரன்—இராமகாதை

இரத்தினபுர அரசன் மகன் சந்திரசோமன் - அவவரசனது அமைச்சன் மகன் விஜயன்-இந்த இருவரும் குபேரன் மகளைச் சேர்ந்து பிரஷ்டராகிப் பின் சமண தீட்சை பெற்று நான்காம் பிறவியில் காசி நாட்டு அரசனுன தசரதனுக்கு இராம-லட்சுமணராகப் பிறந்தனர்—இலங்கை அரசன் புலஸ்தியன் மகன் இராவணன்-'மணிமதி' என்ற தவமகளைக் காதலித்தான்-அவள் இவனை அழிக்க மண்டோதரி வயிற்றில் பிறந்தாள்-பெட்டியில் வைத்து மாரீசன் ஜநகனது தோட்டத்தில் வைத்து மீண்டனன்-நாரதன் சீதை சிறப்பை இராவணற்குக் கூறல்-இராவணன் சூர்ப்பணகையை அனுப்பிச் சரிப்படுத்த முயற்சி-பயனில்லை-இராமனும் சீதையும் காசியை அடுத்த சித்திரகூட உத்யான வனத்தில் இருந்தபொழுது இராமனுக இராவணன் வந்து புஷ்பக விமானத்தில் எடுத்துச் சென்ருன்-இலக்குவனே வாலியையும் இராவணனையும் கொன்ருன்-நரகம் அடைந்தான். இராமன் சமண நிருவாணத்தை அடைந்தான். இவ வரலாற்றில் கைகேயி

சூழ்ச்சி, இராமன் காடுபோதல், மாயமான் தோன்றல் என்பன இடம் பெறவில்லை என்பது இங்கு அறியத் தகும்.

பம்பராமாயணத்தில் விசுவாமித்திரரைப் பற்றிய பேச்சே இல்லை. கர்நாடக கவிசரிதம் என்னும் நூலில் ருஷ்ய சிருங்கர் தசரதனுக்கு மருமகன் என்பதும், இராமன் முதலியோர் அம்முனிவருக்குப் பிறந்தவர் என்பதும் கூறப்பட்டுள்ளன. இராம காதை முனி சூதரர் என்னும் இருபதாம் தீர்த்தங்கரர் காலத்தில் நடந்தது என்று சமண புராணங்கள் கூறுகின்றன.

''இக் கதை ஆதி தீர்த்தங்கரர் தம் மகனை பரதர்க்குச் சொன்னர்......இப்படியே மகாவீரர் பிறர்க்குச் சொன்னர்'', என்று இறையனுர் களவியல் உரை போலக் கூறப்படுகிறது [5]

**ஹேமசந்திரன்—இராமகாதை**

இரத்தின சிரவஸ் (இராவணன்) புனுகர்ணன் (கும்பகர்ணன்) என்னும் இருவரும் சுமலிக்கும் கைகேயிக்கும் பிறந்தவர்—ஒன்பது மணிகள் கொண்ட கழுத்தணியில் இராவணன் முகம் ஒன்பதாகக் காணப்பட்டது-அவற்றுடன் உண்மை முகத்தையும் சேர்த்து இராவணன் தந்தை தன் மகனைத் 'தசமுகன்' என்று அழைத்தான்—வாலி சுக்கிரீவனை அரசனுக்கி ஒரு மலையில் தவம் கிடந்தான்-வாலி சிறந்த சமணன்-சுக்கிரீவன் தன் மகளான ஸ்ரீபிரபா என்பவளைத் தசமுகனுக்கு மணம் செய்வித்தான்-நித்தியலோக தேவதையான இரத்தினவளியை மணக்கத் தசமுகன் புஷ்பக விமானத்தில் சென்றான்—மேரு தடுத்தது-இராவணன்

---

5. கர்நாடக கவி சரிதம்.

சினத்தால் முழக்கமிட்டான்-அதனுல் இராவணன் (முழக்கமிடுபவன்) என்று பெயர் பெற்ருன்.

இராவணன் ஜினதேவர் அருள் பெற்றவன்-சுக்கிரீவன் உதவி கொண்டு திக்விசயம் செய்தவன்-மருத்த ராஜன் கொலேவேள்வியைத் தடுத்து அவள் மகளான கனகப் பிரபையை மணந்தவன்-கொடுங்கோலனுன நளகூபரனைச் செங்கோலன் ஆக்கினவன்-இரத்னபுர அரசனுன இந்திரனை வென்றவன். இவையாவும் சமணராமாயண நூல்களில் காணப்பெறும்செய்திகள்.

இராவணன் மகளான சத்தியவதியையும், சூர்ப்பநகை மகளான ஆனந்தகுசும என்பவளேயும், சுக்கிரீவன் மகளான பத்மராகம் என்பவளேயும், நளன் மகளான அரிமாலினி என்பவளேயும் அநுமான் மனைவியராகப் பெற்றிருந்தான் என்பது சமணராமாயணச் செய்தியாகும்.

அபாராசிதைக்குப் பத்மன் (இராமன்) பிறந்தான், சுமித்திரைக்கு நாராயணன் (இலக்குவன்) பிறந்தான், கைகேயிக்குப் பரதன் பிறந்தான், சுப்ரபாகுவுக்குச் சத்ருக்குணன் பிறந்தான் என்பதும் சமண ராமாயணச் செய்தியாகும்.

### திருமணம்

கயிலேக்கு வடக்கே இருந்த பகையரசன் சனகனை எதிர்த்தான்-இராமன் அப்பகைவனை வென்ருன்-சனகன் அவனுக்குச் சீதையைத் தர விரும்பினுன்-இந்நிலேயில் நாரதன் சீதையைக் காணச் சென்ருன்-நாரதன் கோரவுருவம்-சீதை பார்க்க மறுத்தாள்-நாரதன் சீற்றம்-பமண்டல அரசனைச் சீதையைக் கவருமாறு தூண்டினுன்-பமண்டல அரசன் தந்தை அதனைத் தடுத்து சனகனிடம் மகள் பேசச் சென்ருன்-அது

முடியவில்லை-பிறகு அத்தந்தை தந்த வில்லை இராமன் ஒடித்துச் சீதையை மணந்தான். இலக்குவன் பதினெட்டு வித்யாதர மாதரை மணந்தான்-வலகில்யாவைக் கொன்று வேட அரசனை 'கக' என்பவனை, அவன் மகள் வேண்ட அரசன் ஆக்கினான்-இலக்குவன் மீது காமுற்றுத் தற்கொலை செய்துகொள்ள முயன்ற பெண்ணைத் தடுத்து இலக்குவற்கு மணம் செய்வித்தான்.

இலக்குவன் கிரௌஞ்சப ஆற்றங்கரையில் தவம் கிடந்த சூர்ப்பனகை மகனை (சம்பூகனை)க் கொன்றான்—கரனுக்கும் இலக்குவற்கும் போர்—இராவணன் மறைந்து நின்று இலக்குவனைப்போல அபாய ஒலி செய்தான்.

சுக்கிரீவன் மனைவி தாரை-அழகி-சகஜந்தி என்ற ஒருவன் சுக்கிரீவனைப்போல வந்து அவளிடம் இருந்தான்-சுக்கிரீவன் வந்தவுடன் அவ்விருவர்க்கும் போர் நடந்தது-சுக்கிரீவன் தோற்று இராமனிடம் சரண் புகுந்தான்-இராமன் சகஜந்தியைக் கொன்று சுக்கிரீவனை அரசனாக்கினான். இவ்வரலாற்றில் வாலி பற்றிய பேச்சின்மை காணத்தகும்.

விராதனும் பகமண்டலரும் சீதை இருப்பிடத்தை உணர்த்தினர்-அநுமான் வீடணனைச் சந்தித்துச் சீதையைக் கண்டான்-சீதை, பிரபாவதி, இரததிபவை, ஸ்ரீததமா என்ற நால்வரும் இராமனுக்த மனைவியர் இலக்குவனுக்கு மனைவியர் பதினெண்மர்; மக்கள் இருநூற்று ஐம்பதின்மர்.

பம்ப இராமாயண சங்கிரகம் என்னும் கன்னட நூலைப் பதிப்பித்த திரு. நரசிம்மாச்சாரி என்பவர்மேல் குறிக்கப்பெற்ற செய்திகளை வெளியிட்டு இறுதியில், "வடமொழி, கன்னடம், பிராக்ருத இராமாயணச்

செய்திகள் ஒரே குழப்பமாக உள்ளன; எந்த நூல் கூறுவது சரி என்பது புரியவில்லை"[6] என்று கூறி யுள்ளார்.

தசரதனுக்கு அறுபதினாயிரம் மனைவிகள் இருந் தாற்போல இராமனுக்குப் பதினாயிரம் மனைவியர் இருந்தனர் என்று சைன இராமாயணம் கூறுகின்றது. சனகன் தான் செய்தயாகத்திற்கு இராமன் துணையை வேண்டினான். இராமன் அவனுக்கு உதவி செய்து சீதையை மணந்தான். தசரதன் கட்டளைப்படி இரா மன், இலக்குவன், சீதை என்ற மூவரும் வாழ்ந்து வந்தனர். ஒருமுறை இம்மூவரும் சித்ரகூடம் சென்று விளையாடி இன்புற்றனர். அப்பொழுது நாரதர் அங்குச் சென்றார். அவரை அறியாத இராமன் அவரை உபசரிக்கவில்லை. அதனால் கோபம் கொண்ட நாரதர், இராவணன் என்ற வித்தியாதர வேந்தனிடம் சென்று சீதையின் பேரழகை வருணித்தார். இராவணன் சீதையை அடைய விரும்பினான்; மாரீசனோடு சித்ர கூடம் சென்று, சூழ்ச்சியில் சீதையை எடுத்துச் சென்றான். சுக்ரீவன், அநுமன் முதலிய வித்தியாதரர் கள் இராமனுக்குத் துணையாகச் சென்றனர். வாலிக் கும் சுக்கிரீவனுக்கும் நடந்த போரில் இலக்குவன் வாலி யைக் கொன்றுவிட்டான். பின்னர் நடந்த இலங் கைப் போரில் இராவணன் முதலியோர் இலக்குவனால் கொல்லப்பட்டனர். முடிவில் இராமன், அநுமான் முதலியோர் தீட்சை பெற்று முக்தியடைந்தனர். இலக்குவன் மட்டும் நரகத்தை அடைந்தான். அரக் கர்கள் வித்தியாதர மரபைச் சேர்ந்தவர்கள். இராவ

---

6. D. L. Narasimachariar's Preface to "Pampa Ramayana Sangraham."

ணன் கழுத்தில் அவன் தாய் அணிவித்த முத்துமாலை யில் அவனது முகம் ஒன்பது முறை பிரதிபலித்தது. அவ்வொன்பதுடன் இயற்கைத் தலையையும் சேர்த்து அவன், 'தசமுகன்' என்று அழைக்கப்பட்டான். இரா வணன் சமண பக்தன்; மேரு மலையிலுள்ள சமணர் கோவில்களில் வழிபாடு செய்து அறவுபதேசம் பெற்ற வன். அநுமானும் சமண பக்தனே. அவனுக்கு இராவ ணன் உதவியால் ஆயிரம் மனைவியர் கிடைத்தனர். சீதை இயற்கை நெறியில் சனகனுக்குப் பிறந்தவளே. அநுமான் அணுவாகவும் மகானுகவும் உருவம் எடுக்க வல்லவன் ஆதலால் 'அணுமகான்' எனப்பட்டான். அப்பெயரே அனுமான் எனத் திரிந்தது. இவை சமண ராமாயண நூல்கள் கூறும் செய்திகள். ஒரு இராமா யண நூல் சீதையை இராவணன் மகள் என்று கூறும்.[7]

## வால்மீகி இராமாயணம்
## பல பதிப்புக்கள்—வேறுபாடுகள்

பம்பாயில் பதிக்கப்பெற்ற வால்மீகி ராமாயணம், கல்கத்தாவில் பதிக்கப்பெற்ற வால்மீகி ராமாயணம், தமிழகத்தில் பதிக்கப்பெற்ற கிரந்த ராமரயணம் என வால்மீகி இராமாயணப் பதிப்புக்கள் பல வெளி வந் துள்ளன. கிரிபித் (Griffith), சினூர் கொரிஸிஸ் (Signor Goressiss), ஷிகெல் (Sehlegel) முதலிய மேனாட்டறிஞர் வான்மீகி ராமாயணப் பதிப்புக்களை நன்கு ஆராய்ந்து தம் கருத்துக்களை எழுதியுள்ளனர். அவற்றுள் சிலவற்றை ஈண்டுக் காண்போம்:

---

7. பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, கம்பன் காவியம், பக்கம் 22-25.

"வால்மீகி ராமாயணம் முதல் முதலில் செய்யப் பட்டதற்குப் பின்பு பிற்சேர்க்கைகள் பல இடம் பெற்றுவிட்டன. நூல் எழுதப்படுவதற்கு முன்பு இவ் வரலாறு வாய்மொழியாகக் கூறப்பட்டுவந்தது. அவரவர் தத்தம் விருப்பப்படி அல்லது தாம் பணி புரிந்த அரசர்களது மனநிலைக்கேற்றபடி உண்மை வரலாற்ருேடு புதியனவற்றைச் சேர்த்தனர் அல்லது உண்மைச் செய்திகளை மாற்றியமைத்தனர் என்று கூறும்படி இன்றுள்ள இராமாயண நூல் அமைந் துள்ளது," என்பது கிரிப்பித் என்பவர் கருத்தாகும்

"இராமன் விஷ்ணுவின் அவதாரம் என்பது பிற் சேர்க்கை என்பதற்குப் பல சான்றுகள் உள்ளன," என்று சினூர் கொரிஸிஸ் என்பவர் குறித்துள்ளார்.

"இராமாயணத்தின் முற்பகுதியை நன்கு ஆரா யின், பதினுன்கும் அதற்கு மேலும் உள்ள சில அதி காரங்கள் (இராமனும் அவன் தம்பியும் விஷ்ணுவின் அவதாரம் என்பதைக் கூறும் பகுதிகள்) முதல் நூலில் சேர்க்கப் பெற்ற பிற்சேர்க்கைகள் என்பதை எளிதில் அறியலாம்," என்று ஜான் மூயிர் என்பவர் கருதுகிருர். "ஒரு பதிப்பில் ஐந்தாம் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ள செய்திகள் மற்ருெரு பதிப்பில் பதின் மூன்ரும் அதிகாரத்தில் கூறப்பட்டுள்ளன. எனவே, ஆறுமுதல் பன்னிரண்டு வரையில் உள்ள அதிகாரங் களைப் பிற்சேர்க்கை என்று கூறலாம்"..."பம்பாய்ப் பதிப்பில் இச்சுலோகங்கள் இல்லாததை நோக்க, இவை பிற்சேர்க்கை என்று கூறலாம்"...இராமாயண உரையாசிரியர்களே பல சுலோகங்கள் பிற்சேர்க்கை என்று கூறியுள்ளனர். உத்தர காண்டத்தில் உள்ள இருபத்து மூன்ரும் அத்தியாயத்தின் இறுதியில்,

"இதற்குப் பின்பு வரும் ஐந்து அதிகாரங்களும் பிற்சேர்க்கை என்று கொள்ளலாம் என்று கூறி, அவற்றிற்கு உரை கூருது விடுத்தமை கவனிக்கத் தக்கது". ..."கடகர், தீர்த்தர் முதலிய உரையாசிரியர் உரை கூருது விட்ட இப்பகுதிகள் சில பிரதிகளில் உள; பல பிரதிகளில் இல்லை. எனவே இவை பிற்சேர்க்கை, ஆதலால் யானும் உரை கூருது விட்டேன்."

இவ்வாறே பல பதிப்புக்களில் காணப்படும் பல வேறுபாடுகளை ஜான் மூயிர் என்னும் மேனாட்டறிஞர் ஐம்பது பக்கங்களில் விளக்கியுள்ளார்.[8]

## இராமாயணம்—தத்துவார்த்தம்

இராமகாதை ஒரு குறிப்பிட்ட காலத்தில் நடந்த ஒருவரது வரலாற்று நிகழ்ச்சிகளைக் கொண்டதன்று. அது ஒரு தத்துவத்தை அடிப்படையாகக் கொண்ட வரலாறு அன்று; எந்த ஒரு நாட்டையோ மனித இனத்தையோ சார்ந்ததன்று; சில தத்துவ உண்மைகளை விளக்க எழுந்த நூலாகும் என்பது அறிஞர் கருத்து.[9]

பலர் இராமகாதை உண்மை வரலாற்று நிகழ்ச்சி என்று கருதி, அதன்கண் கூறப்பட்டுள்ள நகரங்கள் மலைகள் முதலியவற்றின் அடையாளம் கண்டறிய முனைந்துவிட்டனர்; ஒரு காலத்தில் இந்தியாவோடு இணைந்திருந்த இலங்கை, இராவணன் வாழ்ந்த

---

8. John Muir's "Original Sanskrit Texts," Vol. IV, pp. 441-491.

9. C. R. Srinivasa Iyengar, Preface, pp. 7-23.

இலங்கை என்றும், சீதை அங்குச் சிறை வைக்கப்பட்டாள் என்றும், இலங்கைக்கும் இராமேசுவரத்திற்கும் இடையில் காணப்படும் பாறைகள் இராமன் கட்டிய பாலத்தின் சிதைவுகள் என்றும் கருதுகின்றனர். அயோத்தி வட இந்தியாவில் இருப்பதாகக் கூறப்படுகிறது. 'தைத்ரேய ஆரணியகம்' என்னும் நூலில் அயோத்தி என்பது மேலுலகத்தில் இருப்பது என்றும் அது கடவுளர் உறையும் நகரம் என்றும் கூறப்படுகிறது. இராமன் பத்தொன்பது வயதினனாக இருந்தபொழுது காடு சென்றான்; பதினான்கு ஆண்டுகள் காட்டில் வாழ்ந்தான்; பின்பு அயோத்தி மீண்டு முடி சூடிக்கொண்டான். எனவே அவன் முடி சூடிக் கொள்ள முப்பத்து மூன்றாண்டுகள் கழிந்துவிட்டன. பல சுவர்க்க நிலைகளின் சேர்க்கை இடுப்பில் அணியும் கச்சைபோல அமைந்துள்ளது. அவ்வமைப்பு முப்பத்து மூன்றாண்டுகட்கு ஒரு முறை சுற்றுகிறது. அதனை உருவகப்படுத்தப்பட்டு எழுதப்பட்ட கதையே இராமகாதை. முதன்முதலில் 'கல்பம்' என்று சொன்ன கால அளவு இதுதான். இதனைப் பிற்காலப் புராண ஆசிரியர்களும் சித்தாந்த நூல்களின் ஆசிரியர்களும் 43,20,000 ஆண்டுகளாகப் பெருக்கிவிட்டனர்.[10]

இராமாயணம் செம்மையான முறையில் ஒரு வரலாற்று நூலைப் போல எழுதப்பட்டிருப்பினும் கற்பனை நூல் என்று கொள்ளுதலே பொருத்தம் உடையது.[11]

---

10. R. Shama Sasthri, 'Ayodhya—The city of Gods' in Acharya Pushpanjalai, pp. 17-19.
11. E. B. Havell's "Aryan Rule in India," p. 43.

## இலங்கை எது?

"இலங்கை மாநகர் கோவில்களையும் அரண்மனை களையும் அழகுறப் பெற்றுத் திகழ்ந்தது; சூரியமண்டலத்திற்கும் விஷ்ணுலோகத்திற்கும்இடைப்பட்டது."[12]

### வால்மீகி கூறுவது:

1. "இராவணனுடைய இலங்கை திரிகூடமலையின் உச்சியில் இருந்தது.

2. சீதையைக் கவர்ந்து சென்ற இராவணன் கழுதைபூட்டிய வண்டியில் சீதையை ஏற்றிக்கொண்டு திரிகூடமலையைச் சூழ்ந்திருந்த சாகரத்தைக் கடந்து இலங்கைக்குச் சென்றான்."

## சாகரம்' என்பது கடலன்று

வான்மீகி முனிவர் கூறியுள்ள இந்த இரண்டு குறிப்புக்களைக் கொண்டு, இராவணன் ஆண்ட இலங்கை, சிங்களத் தீவாகிய இலங்கை அன்று என்பது உள்ளங்கை நெல்லிக்கனியாம். என்னை? சிங்களத் தீவாகிய இலங்கை திரிகூடமலையின் உச்சியில் இல்லை; இது ஒரு தீவாக உள்ளது. கழுதை பூட்டிய வண்டியைச் செலுத்திக்கொண்டு போகக்கூடிய அவ்வளவு சிறிய கடல் அன்று சிங்கள இலங்கையைச் சூழ்ந்துள்ள கடல். மலையின் உச்சியில் இருந்த இராவணனுடைய இலங்கையைச் சூழ்ந்திருந்த "சாகரம்" உண்மையில் கடலன்று; ஏரி போன்ற சிறிய நீர்நிலை

---

12. John Muir, Original Sanskrit Texts, Vol. IV, p. 441.

யாகும். கிருஷ்ணராச சாகரம், கிராத சாகரம், இலக்ஷ்மண சாகரம் என்ற பெயருள்ள ஏரிகள் இப்போதும் உள்ளன. அதுபோன்ற சிறு நீர்நிலைதான் இராவணனுடைய இலங்கையைச் சூழ்ந்திருந்தது என்பது ஆராய்ச்சி வல்லார் துணிபு.

## பரமசிவ அய்யர் சொல்லும் இலங்கை

இராவணன் ஆண்ட இலங்கையானது, மத்திய இந்தியாவில் உள்ள இந்த்ரன மலையுச்சியில் இருந்ததென்றும், இம்மலையைச் சூழ்ந்து மூன்று புறத்திலும் ஹிரான் என்னும் ஆறு பாய்கிறது என்றும், மாரி காலத்தில் இவ்வாறு பெருகி மலை முழுவதும் (அகழி போல்) சூழ்ந்து பெரிய ஏரிபோல ஆகின்றது என்றும், இதுவே வான்மீகி முனிவர் தமது இராமாயணத்தில் கூறிய 'சாகரம்' என்றும், மற்றும் பல சான்றுகளைத் தேசப் படத்துடன் காட்டுகிறார் திரு. பரமசிவ ஐயர். இவர் ஆங்கிலத்தில் இயற்றியுள்ள, "இராமாயணமும் இலங்கையும்" என்னும் நூலைக் காண்க.

## பந்தர்கரின் முடிவு

திரு. பந்தர்கர் என்பவர், தாம் எழுதிய 'தண்டகாரண்யம்' என்னும் கட்டுரையில் மகாராஷ்டிர தேசந்தான் பண்டைக் காலத்தில் தண்டகாரண்யமாக இருந்ததென்றும், இலங்கை, கிஷ்கிந்தை முதலியன மத்திய இந்தியாவில் விந்தியமலைக்குத் தெற்கில் இருந்தன என்றும் கூறுகின்றார்.[13]

---

13. 'Dandakaranya' by Dr. D. R.Bandarkar, The Commemoration Volume.

## ஹீராலால் ஆராய்ச்சி

திரு. ஹீராலால் என்பவர், தாம் எழுதிய, "இராவணனது இலங்கை இருந்த இடம்" என்னும் கட்டுரையில் இச்செய்திகளைக் கூறுகின்றார்:—"விந்திய மலையைச் சார்ந்த மேகலா மலைத் தொடரில் அமரகண்டக் சிகரத்தில் இராவணன் இலங்கை இருந்தது; கொண்டர், ஒராஒனர், சபரர் என்னும் காட்டில்வாழும் மக்கள் குழுவினர் அவ்விடங்களில் வாழ்கின்றனர். இவர்களில் கொண்டர் தம்மை இராவணன் வமிசத்தவர் என்று கூறிக்கொள்வதோடு, 1891-இல் எடுத்த மக்கள் கணக்கில் தம்மை இராவண வம்சம் என்றே பதிவு செய்துள்ளனர். 400 ஆண்டுகளுக்கு முன்னர் இருந்த இவர்களுடைய அரசன் ஒருவன், தனது பொன் நாணயத்தில், தன்னைப் 'புலத்திய வமிசன்' என்று பொறித்திருக்கிறான். இதனால் கொண்டர் இராவண குலம் என்று சொல்லிக்கொள்வது உறுதிப்படுகிறது. ஒராஒனர் என்னும் இனத்தவர் பண்டைய வானரர் இனத்தைச் சேர்ந்தவர். கொண்டர்களுக்கும் சபரர்களுக்கும் பகையிருந்தபடியால், சபரர் இராமன் பக்கம் சேர்ந்தனர். (இராமனுக்கு விருந்திட்ட சபரி என்பவள் சபரர் குலத்தைச் சேர்ந்தவள். இது அவள் இயற்பெயரன்று, குலப் பெயர்). இராமன் இலங்கைக்குக் கடந்து சென்ற "சாகரம்" கடல் அன்று; ஏரியாகும்.[14]

## கிபியின் கூற்று

திரு. கிபி என்பவர் தாம் எழுதிய, "அமரகண்டக் மலையில் இருந்த இராவணனுடைய இலங்கைக்குச்

---

14. 'The Situation of Ravana's Lanka' by Dr. Hiralal, The Commemoration Volume.

சுற்றுப்புறத்திலிருந்த மக்கள்'' என்னும் கட்டுரையில், இராவணனுடைய இலங்கை மத்திய இந்தியாவில் இருந்ததென்றும், அதற்கு அருகிலே தண்டகாரண்யம், சித்திரகூடம், அகத்திய ஆசிரமம், பஞ்சவடி, கிரௌஞ்சம், பம்பை, கிஷ்கிந்தை, அயோத்தி முதலியன இருந்தன என்றும் தேசபடத்துடன் விளக்குகிறார்.[15]

## இராமதாசர் சொல்வது

திரு. இராமதாஸ் என்பவர், இராவணன் இலங்கையும் அமரதீபமும் ஒன்றென்றும், அமரகண்டக் மலையில் இருந்ததென்றும், நருமதை, மகாநதி என்னும் இரண்டு ஆறுகள் உண்டாகிற மேட்டு நிலப் பகுதியே இந்த இடம் என்றும் கூறுகிறார். அன்றியும், மத்திய இந்தியாவில் மத்திய மாகாணத்தில் உள்ள கூயி இனத்தார், இராவணன் மரபினர் என்றும், அமரகண்டக் மலையில் உள்ள கோண்ட்வாஞ என்னும் இடத்தில் உள்ள கோண்டு, கூயி, கோய் என்னும் இனத்தார் இராவணன் மரபினர் என்றும் கூறுகிறார்.[16]

---

15. 'Inhabitants of the country around Ravana's Lanka in Amarakantak' by M. V. Kibe. A Volume of Eastern and Indian studies presented to Professor Thomas Edited by S. M. Kabare and P. K. Gode.
16. 'Ravana's Lanka' by G Ramadoss, The Indian Historical quarterly, Vol. IV pp. 339—346. 'Ravana and his Tribe,' Vol. V, pp. 28; Vol V, pp. 284—555.

**தீட்சிதர்**

திரு. தீட்சிதர் என்பவர், சிங்களத் தீவாகிய இலங்கையும் இராவணன் ஆண்ட இலங்கையும் வெவ்வேறு இடங்கள் என்று கூறுகிறுர்.[17]

**மிஸ்ரா**

திரு. மிஸ்ரா என்பவர், இராவணன் இலங்கை ஆந்திர தேசத்தில் கடற்கரையைச் சேர்ந்த ஓர் இடம் என்கிறுர்.[18]

திரு. வதர் என்பவர், இராவணன் இலங்கை பூமியின் மத்திய இடமாகிய உஷ்ண மண்டலத்தில் இருந்ததாகக் கூறுகிறுர்.[19]

**இலங்கைகள் பல**

இதுகாறும் காட்டிய சான்றுகளால், சிங்களத் தீவாகிய இலங்கை, இராமாயணத்தில் கூறப்படும் இராவணன் ஆண்ட இலங்கை அன்று என்பதும் இரண்டும் வெவ்வேறிடங்கள் எனபதும் விளங்குகின்றன. ஆனுல், எக்காரணத்திஞலோ, சிங்களத் தீவை இராவணன் ஆண்ட இலங்கை என்று மக்கள் தவருகக் கருதுகிறுர்கள். இந்தத் தவருன எண்ணம் பல நூற்ருண்டுகளாக இருந்து வருகிறது.

---

17. 'Ceylon and Lanka are different', quarterly journal of Mythic Society. Vol. XVIII.
18. 'The Search for Lanka' by Mishra-Maha-Kosala Historical Societies Paper, Vol.I.
19. 'Situation of Ravana's Lanka or the Equater' by U. H. Vader. Quarterly Journal. Mythic Society, Vol. XVII.

இதற்குக் காரணம் இலங்கை என்னும் பெயருடைய ஒற்றுமையேயாகும். இலங்கை என்னும் பெயர்உள்ள ஊர்கள் பல உள்ளன என்பதைப் பலர் அறியார். இலங்கை என்னும் பெயர் உள்ள ஊர்களைக் கீழே தருகிறோம்.

"கீழ்க்கோதாவரி மாவட்டப் சோட.வரம் பிரிவில் பூசுல லங்கா, தேமுடு லங்கா என்னும் ஊர்களும், கிருஷ்ணை மாவட்டம் கைகலூரு தாலூகாவில் செவ் வாடலங்கா என்னும் ஊரும் உள்ளன. தமிழ்நாட்டில், தென் ஆர்க்காடு மாவட்டம் திண்டிவனம்தாலூகாவில் மாவிலங்கை (கீழ் மாவிலங்கை, மேல் மாவிலங்கை) என்னும் ஊர் இருக்கின்றது. இவ்வூரைச் சங்க காலத்தில், ஓவியர் பெருமான் நல்லியக் கோடன் என்னும் அரசன் ஆண்டான் என்பதைப் பத்துப் பாட்டுச் சிறுபாணாற்றுப்படையினால் அறிகிறோம்.

**" தென்மா விலங்கைக் கருவொடு பெயரிய**
**நன்மா விலங்கை மன்ன ருள்ளும்**
**மறுவின்றி விளங்கிய வடுவில் வாய்வாள்**
**வறுபுலித் துப்பின் ஓவியர் பெருமகன் "**

என்று வருதல் காண்க.

"இராமநாதபுர மாவட்டம் திருப்புத்தூர் தாலூகா வில் கீழ்த்திருவிலங்கை என்னும் ஊரும், முதுகுளத் தூர்த் தாலூகாவில் **மாவிலங்கை** என்னும் ஊரும், பரமக்குடி தாலூகாவில் மற்றொரு **மாவிலங்கை** என் னும் ஊரும் உள்ளன. செங்கற்பட்டு மாவட்டம் திரு வளளூர் தாலூகாவில் **புதுமாவிலங்கை** என்னும் ஊரும், திருச்சிராப்பள்ளி மாவட்டம் பெரம்பலூர்

தாலூகாவில் மாவிலங்கை என்னும் இனும் கிராமமும் உள்ளன. மேற்கூறிய இராமநாதபுர மாவட்டத்தில் பரமக்குடி தாலூகாவில் மாவிலங்கை என்னும் இனும் கிராமமும், சிவகங்கை தாலூகாவில் மாவிலங்கை என்னும் சமீன் கிராமமும், திருவாடானை தாலூகாவில் மாவிலங்கை என்னும் பெயருள்ள சமீன் கிராமமும், இனும் கிராமமும் ஆகிய இரண்டும் உள்ளன. இவை யாவும் இலங்கை என்னும் பெயரால் முடிவது காண்க. அன்றியும் ஆறுகள் கடலுடன் கலக்கிற இடத்தில் பல கிளைகளாகப் பிரிந்து ஏற்படுகிற 'டெல்ட்டா' என்று சொல்லப்படுகிற தீவுகளுக்கு ஆந்திர நாட்டில் 'லங்கா' என்று பெயர் கூறப்படுகிறதென்று தெரிகிறது. ஆகவே, இராவணன் ஆண்ட ஊர் ஒன்றுக்கு மட்டும்தான் இலங்கை என்னும் பெயர் உண்டு என்று கருதுவது தவறு. பண்டைக் காலத்தில் இலங்கை என்னும் பெயருள்ள ஊர்கள் பல இருந்தன.

## முடிவு

"எனவே, தமிழ் நாட்டுக்கு அடுத்துள்ள சிங்களத் தீவாகிய இலங்கைக்கும் இராவணன் ஆண்ட இலங்கைக்கும் தொடர்பு இல்லை என்பதும், இத்தொடர்புடைய கதைகள் பிற்காலத்தில் கற்பிக்கப்பட்டவை என்பதும் தெளிவாகின்றன. இலங்கையின் புராதன நூலாகிய மகாவம்சம் என்னும் நூலில் இராவணன், இலங்கை என்ற பெயர்களே கூறப்படவில்லை. இராவணன் ஆண்ட இலங்கை இப்போது மராட்ட நாடு உள்ள பகுதியில் விந்திய மலையைச் சார்ந்த இடத்தில் இருந்தது என்பது ஆராய்ச்சியாளரின் முடிபு. அங்ஙனமாயின், மலயமலை, பாண்டியனுடைய கபாடபுரம் முதலியவை வால்மீகி இராமாயணத்தில் கூறப்படு

கிறதே என்ருல், இந்தச் சுலோகங்கள் இடைச்செருகல் களாகும். வடமொழி இராமாயணத்திலும் வேறு நூல்களிலும் பல இடைச்செருகல் சுலோகங்கள் பிற் காலத்தில் சேர்க்கப்பட்டுள்ளன என்பதை மறக்கக் கூடாது.''[20]

## இவ்வரலாறு இந்தியாவில் நடந்ததா ?

கிஷ்கிந்தா காண்டத்தில் சுக்கிரீவன் சீதையைக் கண்டுபிடிக்கத் தன் வீரர்களை ஏவும் பொழுது கிஷ் கிந்தையை நடுவிடமாகக் கொண்டு அங்கிருந்து நான்கு திக்குகளிலும் போகும்படி தன் வீரர்க்கு அறி வுறுத்துகின்ருன்; ஒவ்வொரு திசையிலும் உள்ள மலை கள் ஆறுகள் நாடுகள் தோட்டங்கள் காடுகள் இவற்றை விவரித்துக் கூறுகிருன். இவ்வாறு அவன் கூறும் விவரங்கள் பொருத்தமாக இருக்கின்றனவா என்று உலகப்படத்தை வைத்துக்கொண்டு ஆராய்ச்சி யாளர் ஆராய்ந்து பார்த்தனர்; கிஷ்கிந்தையை நடு விடமாகக் கொண்டு கூறப்படும் நாற்றிசைச் செய்தி கள் பொருத்தமாக வரவில்லை என்பதைக் கண் டனர்.[21] ''சுக்கிரீவன் கூறியதாக வான்மீகி கூறும் விவரங்கள் பொருந்துமாறு இல்லை. எனவே இராமா யண நிகழ்ச்சிகள் இந்தியாவில் நடைபெற்றன என்று கூறுதல் ஐயமே'' என்ற முடிவுக்கு வந்தனர். வேதம்-வேங்கடராம ஐயர் என்ற அறிஞர் பலவாறு ஆராய்ந்து, ''இராமாயண வரலாறு கூறும் விவரங்

---

20. செந்தமிழ்ச் செல்வி, தொகுதி 23, பரல் 3, பக்கம் 99—103.

21. Nobin Chandra Das, 'Ancient Geography of Asia' compiled from Valmiki Ramayanam.

கள், இன்றைய துருக்கி, காக்கஸஸ் மலைப்பகுதி, அதனைச் சுற்றியுள்ள நிலப்பகுதி இவற்றில் நடை பெற்றனவாக இருத்தல் வேண்டும்" என்று முடிவு கட்டினர்.[22]

இதுகாறும் கூறப்பெற்ற உண்மைகள் யாவை? வான்மீகி எழுதிய இராமாயணத்திலேயே இடைச் செருகல்கள் பல; பல்வேறு இராமாயண நூல்களில் கூறப்படும் செய்தி வேறுபாடுகள் பல; நிகழ்ச்சி வேறு பாடுகள் பல; இராவணன் ஆண்ட இலங்கை எது என்பது தெளிவாக்கப்படவில்லை; வரலாறு நடந்த இடமே எது என்பது ஐயத்திற்கிடமாக உள்ளது—என்னும் செய்திகள் இதுகாறும் கண்ட உண்மைகளால் புலப் படுகின்றன. இந்நிலையில், தசரதனுக்குப் பிறந்த இராமன் என்ற அரச குமாரனைக் கம்பர் திருமாலின் அவதாரமாக ஆக்கி வைத்தார்.

## இதற்குக் காரணம் யாது?

நெடுங்காலமாக இராமன் வரலாறு அரசர்அவைக் களங்களில் நடிக்கப்பட்டு வந்தது. நாளடைவில் நாடக அமைப்பிற்கு ஏற்பப் பழைய கதையில் பல மாற்றங்கள் செய்யப்பட்டன. இவற்றை உளங் கொண்டு, "வான்மீகி உயர்ந்த லட்சியங்களை முன் னிறுத்தி, அவை விளங்கும் அழகிய சரிதமொன்றை இயற்றினர். இதுவே இராமாயணம். ஆனால், இராம சரிதத் தொடக்கம் இவ்வாறிருப்பினும், பின்னர், கால அடைவில், சமய நூலாகவும் பக்தி நூலாகவும் பரிண மித்துவிட்டது. இராமன் மனுஷ்யநிலை கடந்து தெய்வ மாகிவிட்டான்."[23]

---

22. Vide his 'Arya vartha' and 'Baratha Varsha.'
23. பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, கம்பன் காவியம், பக்கம் 18.

"கி. பி. நான்காம் நூற்றுண்டில் குப்தர்கள் காலத்திலும் அதற்குச் சிறிது முன்னும் பின்னும் இதிகாசங்களும் புராணங்களும் விரிவாக்கப்பட்டன. அப்பொழுது அவதாரக் கதைகள் புதியனவாகச் சேர்க்கப்பட்டன.[24] பழைய வீரர்கள் அவதார புருஷர்களாக ஆக்கப்பட்டார்கள்" என்று ஆராய்ச்சியாளர்கள் தக்க சான்றுகள் காட்டியுள்ளார்கள். இம்மாற்றங்களுக்குப் பின்னரே பொதுமக்கள் இராமாயண வரலாற்றை விரும்பிக் கேட்கலாயினர். பின்னர் நாளடைவில் அவதார புருஷனுகக் கருதப்பட்ட இராமனுக்குக் கோவில்கள் தோன்றின. அஃதாவது, கி. பி. நான்காம் நூற்றுண்டிற்குப் பிறகு இராமன் தெய்வமாக வழிபடப்பட்டான். ஆழ்வார்கள் இராமாவதாரத்தைச் சிறப்பித்துப் பாடினர். அவர்தம் அருட்பாடல்கட்கு மணிப்பிரவாள நடையில் (வடமொழி பாதியும் தமிழ்மொழி பாதியும் கலந்த நடையில்) விரிவான உரை எழுதப்பட்டது. இராமானுசர் காலத்தில் வைணவ சமயம் நன்கு வளர்க்கப்பட்டது. இராமாயண வரலாறு பல கோவில்களில் படித்து விளக்கப்பட்டது.

---

24. "Both the Ramayana and the Mahabharata were finally recast at this period with many new stories and legends added, so as to fascinate the ignorant masses. That their authors had a motive to dicredit Buddhism is seen from a passage in Ramayana. In Ramayana, Rama is made to say that Buddha is a thief, the Tathagata is a Nastik or Atheist."

—The Menance of Hindu Imperialism, pp. 103-104 ; and C. V. Vydia, Epic India. p. 377.

இத்தகைய காலத்தில்—கி. பி. பன்னிரண்டாம் நூற்ருண்டின் பிற்பகுதியில் கம்பர் தோன்றினர்.

**கம்பர் கால நிலை**

கம்பர் சோழப் பெருநாட்டில் பிறந்தவர். ஏறத்தாழக் கி. பி. 9-ஆம் நூற்ருண்டின் இறுதி முதல் 12-ஆம் நூற்ருண்டு வரையில் சோழப் பேரரசு தென்னிந்தியா முழுவதும் பரவியிருந்தது. சோழப் பேரரசர் கடல் கடந்த நாடுகளை வென்றனர். ஏறத்தாழ இந்த 400 வருட காலம் சோழப் பெருநாடு செல்வச் சிறப்புடன் விளங்கிவந்தது; செல்வப் பெருக்குப் பல தீமைகளையும் விளைத்தது; குடியும் ஒழுக்கக்கேடும் இருந்தன; போக பாக்கியங்கள் மிகுதிப்பட்டன. சமயவெறி தலை தூக்கியது; சாதிச் செருக்கு மிகுந்தது; சமுதாயத்தில் உயர்வு - தாழ்வுகள், மேடு - பள்ளங்கள் காணப் பட்டன.

கல்வியில் பெரிய கம்பர் உலக அநுபவத்திலும் பெரியவராக விளங்கினர்; அவர் தம் முன் காணப் பட்ட மேற்சொன்ன வேறுபாடுகளை வெறுத்தார்; சைவ வைணவர்க்குள் இருந்த மனக்கசப்பை மாற்ற எண்ணினர்; அரசியல் இன்னின்னவாறு அமைதல் வேண்டும் என்று திட்டமிட்டார்; இத்தகைய (தம் முடைய) கருத்துக்களை வெளியிட இராமாயணத்தை ஒரு கருவியாகக் கொண்டார். கம்பர் தமிழ்க் கடலை எல்லை கண்டவர்; உலகியல் அறிவு சிறக்கப்பெற்ற வர்; தமிழகம் முழுவதும் சுற்றித் திரிந்தவர்; அரசன்

முதல் ஆண்டி ஈருக அனைவருடனும் பழகி அநுபவம் பெற்றவர்; உளநூல் அறிவு, சமயநூல் அறிவு முதலிய பலதுறை அறிவில் மேம்பட்டவர்; தம் காலத்தில் வாழ்ந்த செல்வர்தம் பெருமித வாழ்வையும் அதனால் பேரரசு தளர்ந்து வருதலையும் அறிந்தவர். அக்கால மக்கள் களியாட்டங்களைப் பூக்கொய் படலம், புனல் விளையாட்டுப் படலம், உண்டாட்டுப் படலம் இவற்றிற் காணலாம்.

## கம்ப ராமாயணம்

கம்பர் காலத்தில் வைதிகச் சைவமும் வைணவமும் நாட்டில் பரவியிருந்தன. இராமன் திருமால் அவதாரம் என்று கருதப்பட்ட காலம் ஆதலால், கம்பர் பொது மக்கள் நம்பிக்கைக்கு ஏற்றவாறு கதையை அமைத்தார்; தமிழ்நாட்டு இலக்கண மரபுக்கு ஏற்றபடியும் தமிழர் பண்பாட்டிற்குத் தக்கவாறும் சில நிகழ்ச்சிகளைப் புதியனவாகவும் திருத்தியும் அமைத்தார். அப் பெருமகன் கதையில் காணப்படும் கோசல நாடு தமிழ் நாடே; நகரப் படலச் செய்திகள் தமிழ்நாட்டு நகரச் செய்திகளே ஆகும். அவர் கூறும் கார்கால வருணனை போன்றவை சங்கத் தமிழ் நூல்களில் காணப்படும் பருவகாலச் செய்திகளின் சாரமே. அவர் கூறியுள்ள அநுபவங்கள் அனைத்தும் இந்நாட்டு அறிஞர் அநுபவங்களே. சுருங்கக்கூறின், இராமாயணத்தில் உயிர் நாடியாக உள்ள கவித்துவம், சொல்லழகு, பொருளழகு, பொருள் ஆழம், வாழ்க்கை அநுபவங்கள், எக் காலத்தும் உண்மையாக உள்ள வாக்குகள், உயர்ந்த பண்பாட்டிற்குரிய செய்திகள் என்னும் அனைத்தும் நம் தமிழ்ச் செல்வங்களே ஆகும். இவற்றை நன்கு

உணர்ந்து இப்பெரு நூலிலுள்ள இலக்கியச் செல்வத்தை நுகர்தலே நல்லறிஞர் கடமையாகும். "மத நோக்கம் மேற்பட்டால், கலையுணர்ச்சியும் கவிதையுணர்ச்சியும் முற்றும் மறைந்துவிடும்".[25]

---

25. பேராசிரியர் எஸ். வையாபுரிப் பிள்ளை, கம்பன் காவியம், பக்கம் 25.

## 2. கம்பர் யார்?

### முன்னுரை

கம்பர் தமிழ் நாட்டில் பிறந்தவர்; தமிழ்ப் பெரும் புலவர் ; வாழையடி வாழையாக வந்த தமிழ் மரபில் பிறந்தவர். ஆதலால், அப்பெருமகன் தாம் பாட மேற் கொண்ட இராமகாதையில் பல இடங்களில் தமது தமிழ்ப் பற்றையும் தமிழ் நாட்டுப் பற்றையும் படிப் பவர் அறிந்து மகிழும் வண்ணம் அமைத்துள்ளார் ; தமிழ் இலக்கணத்திற்கும் தமிழர் அற வாழ்வுக்கும் பொருந்தாத சிலவற்றை மாற்றித் தமிழர் பண்பாட்டிற் கேற்ப அமைத்துள்ளார்.

### தமிழ்ப்பற்று

அகத்தியர் வடநாட்டிலிருந்து தென்னுடு போந்து தமிழினை நன்கு கற்றுத் தமிழர்க்கு முதன் முதலில் தமிழ் இலக்கணம் செய்தார் என்று சான்றற்ற கதை ஒன்று இந்நாட்டில் வழங்கி வருகின்றது. ஏறத்தாழக் கி.பி. ஏழாம் நூற்ருண்டிலேயே இக்கதை தமிழகத்தில்

வழங்கிவந்தது என்பதை இறையனார் களவியல் உரை கொண்டு உணரலாம். அகத்தியர் தலைச்சங்க முதல்வர் என்றும், அவர் செய்த இலக்கண நூல் அகத்தியம் என்றும் அவ்வுரை கூறுகின்றது. ஆயின், இத்தகைய பெருமையும்பழமையும் வாய்ந்த அகத்தியர் இலக்கணம் பற்றிச் சங்கத் தொகை நூல்களில் ஒரு குறிப்பும் காணப்படவில்லை. அவரைப் பற்றிப் பிற்காலத்திற் கூறப்படும் கதைகள் சங்க நூல்களில் யாண்டும் குறிக்கப்படவில்லை. எனினும், அகத்தியரால் தமிழ் சிறப்படைந்தது என்ற கதை எவ்வாறோ கடைச்சங்க காலத்திற்குப் பிறகு தமிழகத்தில் பரவிவிட்டது. அதனாற்றான் அவரைப் பற்றிய செய்தி இறையனார் களவியல் உரையில் காணப்படுகின்றது.

இக்கதை கம்பருக்கு உடன்பாடில்லை. தமிழ் மொழி என்று தோன்றியது என்பதை இதுகாறும் கூறினவர் எவருமில்லை. ஆரியர் இந்தியாவிற்கு வருமுன்னரே தமிழர் இந்நாட்டிலிருந்தனர்.-சிறந்த நாகரிகத்துடன் விளங்கினர்-உள்நாட்டு வாணிகத்திலும் வெளிநாட்டு வாணிகத்திலும் சிறந்திருந்தர் என்ற உண்மைகளை ஆராய்ச்சியாளர் அனைவரும் ஒப்புக்கொண்டுள்ளனர். ஆரியர் தென்னாடு வருதற்கு முன்னரே தமிழில் இலக்கண இலக்கியங்கள் இருந்திருத்தல் வேண்டும் என்பது தொல்காப்பியம் என்னும் பெருந்தமிழ் இலக்கண நூலைக்கொண்டு நன்குணரப்படும். இன்று ஆராய்ச்சியால் உணரப்படும் உண்மைகளைக் கல்வியிற் சிறந்த கம்பர் உணராமலில்லை. அப்பெருமகன், அகத்தியன், "என்றுமுள தென்தமிழ் இயம்பி இசைகொண்டான்" என்று கூறியுள்ளார். தமிழ் என்றுமுள்ளது. அதனை வடநாட்டிலிருந்து தென்னாடு போந்த அகத்தியன்

பயின்று (இலக்கண நூல் செய்து?) புகழ் கொண்டான் என்று கம்பர் கூறியுள்ளாரே தவிர, இவனே தமிழில் முதல் இலக்கண நூல் செய்தான் என்பவர் கூற்றைக் கம்பர் ஒப்புக்கொள்ளவில்லை என்பது இதனால் அறியப்படும்.

## தமிழகப் பற்று

கம்பர் வளம் மிகுந்த சோழநாட்டில் பிறந்து வளர்ந்தவர்; "செவிலித்தாய் என்ன ஓம்பும் தீம்புனற் கன்னி" நாடாகிய சோழநாட்டு வளத்தை விழிகளாரப் பருகியவர். ஆதலால் அப்பெரும் புலவர், தாம் கண்ணுற்காணாத கோசல நாட்டைச் சோழநாடாகவே கருதிச் சிறப்பித்துள்ளார் என்பதைப் பாலகாண்டத்தி லுள்ள நாட்டுப் படலம் நன்கு விளக்குகிறது. இன்று அயோத்தியையும் அஃது உள்ள நாட்டினையும் நேரில் கண்டு மீண்டவர் கூறும் விவரங்களையும் காண, கம்பர் பாடல்கள் அந்நாட்டு வளப்பத்தைக் கூறுவன அல்ல, காவிரி நாட்டு வளத்தையே கம்பர் கோசல நாட்டு வளமாக மாற்றிப் பாடிவிட்டார் என்னும் உண்மைகள் அறிவுடையோர்க்கு நன்கு புலனாகும். அப்பெரும் புலவர் கோசலநாட்டைக் குறிக்கையில்,

> "காவிரி நாடன்ன கழனி நாடு"

என்று கூறியுள்ளார். இஃது, அப்பெரும் புலவரது தமிழகப் பற்றை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் உணர்த்துவதாகும்.

மேலும் கோசல நாட்டில் உள்ளனவாக அவர் கூறும் மருதநிலச் சிறப்பு, முல்லைநில மாண்பு, குறிஞ்சி

நிலவளம் முதலியனவும் அவ்வந்நிலத்தார் செயல்களும் தமிழகப் பொருள் இலக்கணத்தை முற்றிலும் தழுவியனவாகும் என்பதைத் தமிழ் இலக்கண இலக்கியங்களைக் கற்ற அறிஞர் நன்கு அறிவர். இவ்வாறே, கிஷ்கிந்தா காண்டத்தில் கூறப்பட்டுள்ள கார்கால வருணனை முழுவதும் தமிழிலக்கண இலக்கியங்களிலிருந்து பிழிந்தெடுக்கப்பட்ட சாறேயாகும் என்பதையும் அறிஞர் எளிதில் அறியக்கூடும்.

## கம்பர் செய்த மாற்றம்

சனகன் வைத்திருந்த வில்லை முறித்த பிறகே இராமன் சீதையை நேரிற் கண்டு மணந்துகொண்டான் என்று வால்மீகி கூறியுள்ளார். காதலனும் காதலியும் ஒருவரையொருவர் நன்கு அறிந்த பின்னரே மணம் முடிப்பது தமிழர் மரபு. இதனை உளங்கொண்ட கம்பர், இராமன் சனகனது வில்லை முறித்ததற்கு முன்பே சீதையையும் இராமனையும் சந்திக்கச் செய்கின்றார். கோசிக முனிவனோடும் தன் தம்பியுடனும் இராமன் மிதிலையின் தெருக்களில் செல்கின்றான்; அரசர் தெருவில் சனகனது அரண்மனை மேன்மாடச் சுவர்மீது அன்னங்கள் விளையாடுகின்றன. அவற்றைப் பார்த்தபடி அம்மேன் மாடத்தில் சீதையும் அவளுடைய தோழிகளும் நிற்கின்றனர். அவ்வழியே சென்ற இராமன் தலை நிமிர்ந்து அன்னப் பறவைகளைக் காண்கிறான்; பின்பு சீதையாகிய அன்னத்தையும் கண்டு களிக்கிறான். அதே சமயத்தில் மாடத்தே நின்றபடி அன்னங்களின் விளையாட்டைக் கவனித்துவந்த சீதையின் பார்வை, தெருவிலே சென்றுகொண்டிருந்த இராமன் என்ற கட்டழகன்மீது விழுகின்றது. இருவர்

பார்வைகளும் ஒன்றை ஒன்று சந்திக்கின்றன; இருவர் அகமும் முகமும் மலர்கின்றன ; இருவர் உள்ளங்களி லும் ஒருவகைப் புத்துணர்ச்சி குடிகொள்கிறது; ஒரு வர் உருவத்தை மற்றவர் விழியாரப் பருகுகின்றனர்.

அன்று இரவு இராமன் ஒரு முனிவர் ஆசிரமத்தில் தங்குகிருன் ; தன் உள்ளத்தில் தோன்றிய 'காதல்' என்னும் புத்துணர்ச்சியால் இரவு முழுவதும் சீதை யைப் பற்றியே எண்ணமிட்டுக்கொண்டு இருக்கிருன். இவ்வாறே சனகன் அரண்மனையில் சீதையும் உறக்க மில்லாமல் இராமனைப் பற்றியே எண்ணி எண்ணி ஏங்குகிருள். பொழுது விடிகின்றது. இராமன் கோசிக முனிவனேடு சனகன் அரண்மனையை அடைகிருன்; அரசர் பலரைக் கண்டு வியப்பும் திகைப்பும் அடைய, வில்லை முறிக்கின்ருன். வில்லை முறித்தவன் தான் நேற்றுத் தெருவில் போகக்கண்ட கட்டழகனே என் பதைத் தோழி வாயிலாக அறிந்த சீதை, உள்ளத்தில் ஒருவராலும் கரைசெய்ய அரியதொரு பேருவகை கொள்கின்ருள். இச்செய்தி வான்மீகி கூருதது; கம்பர் தாமே படைத்து மொழிந்தது. இதனை விவரமாகக் கூறும் பகுதியே மிதிலைக் காட்சிப் படலம் என்பது. இவ்வாறு கம்பர், தாம் தமிழராதலால், தமிழ் அகப் பொருள் இலக்கணத்திற்கேற்ப, இப்புதிய காட்சி யைப் படைத்து மொழிந்தனர் என்று சான்ருேர் கூறுவர்.

### வால்மீகி தாரை

வாலி கொல்லப்பட்ட பிறகு சுக்கிரீவன் அரசனு கிருன் ; கார்காலம் முடிந்தவுடன் தன் படைவீரரை யனுப்பிச் சீதையைத் தேடச் செய்வதாக வாக்களிக்

கிருன்; கார்காலம் முழுவதும் அவன் குடித்தும் மாதரொடு விளையாடியும் பொழுது போக்குகின்ருன் ; வாலியின் மனைவியாகிய தாரையோடு கள்ளுண்டு மதி மயங்கிக் கிடக்கிருன். இந்நிலையில் கார்காலம் முடிகின்றது. சீதையின் பிரிவால் வாடுகின்ற இராமன், சுக்கிரீவன் சொன்னபடி நடவாமையால் சீற்றங் கொண்டு, சுக்கிரீவனைப் பார்த்துவருமாறு இலக்குவனை அனுப்புகின்ருன். இலக்குவன் மிகுந்த சீற்றத்தோடு கிஷ்கிந்தை நகருள் நுழைகிருன். அவனது நோக்கத்தை அறிந்த அநுமான், தான் நேரில் செல்லாது, மது மயக்கத்திலே ஆழ்ந்துகிடந்த சுக்கிரீவனை எழுப்ப முடியாமல் தவிக்கிருன் ; பின்பு தாரையை எழுப்பி இலக்குவன் கோபத்தோடு வருவதையும், அவள் சென்று அவனைத் தடுத்து நிறுத்திஞல்தான் சுக்கிரீவன் பிழைப்பான் என்றும், இல்லையாகில் சுக்கிரீவன் கொல்லப்படுவதுடன் கிஷ்கிந்தையே நாசமாகும் என்று கூறுகிருன். குடிவெறி தெளிந்த தாரை எழுந்து, தனது கூந்தல் புரள, வாயிலிருந்து 'சொள்ளு' வடிய, அலங்கோல ஆடையுடன் இலக்குவனைத் தடுத்து நிறுத்தச் செல்கிருள். இக்குறிப்பிட்ட நிகழ்ச்சி வால்மீகி இராமாயணத்தில் உள்ளது.

இதே நிகழ்ச்சியைக் கம்பர் வேறுவிதமாகக் காட்டுகின்ருர். அதனைக் காண்க :—இலக்குவன் கிஷ்கிந்தையை நோக்கி மிக்க சீற்றத்துடன் வருவதைக் கண்ட அங்கதன் சுக்கிரீவனிடம் செல்கிருன். அப்பொழுது, நளன் என்னும் வானர வீரஞல் செய்யப்பட்ட சிறந்த அரண்மனையில், மலர்களைப் பரப்பியமைக்கப்பட்ட அழகிய படுக்கையில் சுக்கிரீவன் படுத்திருக்கிருன். தொங்குகின்ற கூந்தலையும் பேரழ

கையுமுடைய மகளிர் அவன் கால்களைப் பிடிக்கின்றனர். சிந்துவாரமரம், சுகந்தக்கொடி, தேக்கமரம், அகில் மரம், சந்தனமரம், மயில்போலும் சாயலையுடைய மகளிரது தொங்குகின்ற கூந்தல், அக்கூந்தலிற் சூடிய நறுமணமுள்ள மலர்களின் தொகுதி என்னும் இவற்றில் ஊடுருவி வரும் இளங்காற்று அவன்மேல் வீசுகிறது. இனிக்கின்ற சிவந்த அதரத்தையுடையவர்களான பெண்களுடைய முத்துப்போல வெண்ணிறமான புன்சிரிப்பைச் செய்கின்ற கூரிய பற்களிலிருந்து சுறக்கின்ற தேன்போல் இனிய சாறு, பயித்தியத்தையும், மயக்கத்தையும், காமம், மதம், மறதி, சோர்வு, உறக்கம் முதலியவற்றையும் மிகுதிப்படுத்தலால் சுக்கிரீவன் மதங்கொண்ட யானைபோல் மயங்கிக் கிடக்கின்ருன்.

அந்நிலையில் அங்கதன், இலக்குவன் வருகையை அவனிடன் கூறுகிருன். இக்கூற்றுச் சுக்கிரீவன் செவிகளில் படவில்லை. பின்பு அங்கதன் அநுமானை அழைத்துக்கொண்டு, தன் தாயினிடம் சென்று செய்தியை அறிவிக்கிருன்.

### கம்பர் தாரை

தாரை, வால்மீகி கூறும் தாரையைப்போலக் குடிப்பவளல்லள். அவள் கம்பர் படைத்த தாரை; பெண்மைக்கு இலக்கணமாக இலங்குகின்றவள்; கணவன் இறந்தபின் கைம்மை நோன்பு நோற்கின்றவள்; ஆதலால் அங்கதனும் அநுமானும் தொழுத்தகும் நிலையில் விளங்குகின்ருள். அவள் தனி மாளிகையில் தன் பணிப்பெண்களோடு வாழ்கின்ருள். அப்பெருமாட்டி தன்னிடம் யோசனை கேட்கவந்த அங்கதனை

யும் அநுமானையும் நோக்கி, "நீங்கள் உறுதி தவறினீர்கள்; இராமன் செய்த நன்றியை மறந்தீர்கள்; நீங்கள் செய்துள்ள தீமை பயனளிக்க வந்ததனால், இவ்வாறு குணங்கெட்டவரானீர்கள்" என்று கடிகின்றாள்.

அப்பொழுது அநுமான், 'இலக்குவன் சிறந்த வீரன்; ஆயினும், அவன் மனம் மலர்போல மெல்லியது. பெண்பாலாகிய நீ சென்று சுக்கிரீவனது அரண்மனையின் வாயில் வழியில் நின்றுவிடின், மகளிரை எதிர்த்தல் முறையன்று என்று எண்ணி இலக்குவன் அவ்வழியைக் கண்ணெடுத்துப் பாராமல் விலகிச் செல்லுவான்", என்று யோசனை கூறுகிறான். அந்த யோசனைப்படி தாரை நடக்கத் துணிகின்றனள்.

தன்னைப் பார்ப்பவரை அப்பாற் செல்லவிடாமல் கட்டுப்படுத்துகின்ற மெல்லிய தன்மையினையும், வெண்மையான சந்திரன்போல் விளங்கும் புன்சிரிப்பையும், நுண்ணிய இடையையும், உயர்ந்து இளமை மாறுத மென்மையான நகில்களையும், மயில் போலும் சாயலையும் உடைய தன் தோழிமாரை அழைத்துச் சென்று சுக்கிரீவன் அரண்மனையிருக்கும் தெருவின் வழியைத் தாரை தடுக்கின்றாள்.

ஆரவாரிக்கின்ற காற்சிலம்புகள் போருக்குரிய பேரிகை வாத்தியங்களாகவும், கண்கள் வேற்படைகளாகவும், புருவங்கள் விற்படைகளாகவும் அமையும்படி மகளிராகிய சேனை சூழ்ந்தபோது, இலக்குவன் கோபம் மாறுகிறது; அவன் தன் முகத்தைத் திருப்பிக்கொள்கிறான்; அம்மகளிரைக்

கண்ணெடுத்துப் பார்க்கவும் அஞ்சுகிருன்; தனது கையிற் பிடித்த வில்லைத் தரையிலே ஊன்றவைத்து மாமியார் கூட்டத்தினிடையே வந்த மருமகன்போல, தலைகுனிந்து நிற்கின்ருன். அப்பொழுது நீண்ட கண்களையும் தூய வுள்ளத்தையுமுடைய தாரை, தன் தோழிமார் கூட்டத்தினிடை ஒதுங்கிக் கூச்சத்தால் நடுங்கிக்கொண்டு கீழ்வருமாறு பேசலாளுள்:

> "வீரனே, அளவற்ற காலம் தவம் செய்த சிறப்பால்தான் நாங்கள் உனது வருகையைப் பெற்ருேம். உனது வரவால் எங்கள் வினை ஒழிந்து உயர்வுபெற்ருேம். நீ சீற்றத்துடன் வருவதைப் பார்த்து வானர வீரர் அஞ்சுகின்றனர். இராமனை விட்டுப் பிரியாத நீ இங்குத் தனியே வரக் காரணம் யாது?"

இவ்வுரை காதில் விழுந்ததும், இலக்குவன் உள்ளத்தில் அருள் பிறந்தது; கோபம் குறைந்தது; இதனைச் சொன்னவர் யார் என்று அறியத் தன் தலையை நிமிர்த்திப் பார்த்தான். வெண்மையான முழுமதி பகற்பொழுதில் நிலத்தில் வந்த தோற்றம் அவனுக்குத் தெரிந்தது. அவளது முகம் மங்கலக் குறியோடில்லை; அவளது உடலில் நகைகள் இல்லை; வாழ்வரசிக்குரிய மலர்மாலை இல்லை; அவளது மார்பும் கழுத்தும் மேலாடையால் நன்ருகப் போர்த்தப்பட்டிருந்தன. பெண்களிற் சிறந்த அத்தாரையினது கைம்மைக் கோலத்தைக் கண்டதும், இலக்குவனுக்குத் தன் தாய்மார் நினைவு உண்டானது. உடனே அவன் கண்களில் நீர்த் துளிகள் வெளிப்பட்டன.

"ஆர்கொலோ வுரைசெய் தாரென்
 றருள்வரச் சீற்றம் அஃகாப்
பார்குலா முழுவெண் திங்கள்
 பகல்வந்த படிவம் போலும்
ஏர்குலா முகத்தி னாளை
 இறைமுகம் எடுத்து நோக்கித்
தார்குலாம் அலங்கல் மார்பன்
 தாயரை நினைந்து நைந்தான்."

"மங்கல அணியை நீக்கி
 மணவணி துறந்து வாசக்
கொங்கலர் கோதை மாற்றிக்
 குங்குமஞ் சாந்தங் கொட்டாப்
பொங்குவெம் முலைகள் பூகக்
 கழுத்தொடு மறையப் போர்த்த
நங்கையைக் கண்ட வள்ளல்
 நயனங்கள் பனிப்ப நின்றான்."

—கிட்கிந்தைப் படலம்

அவ்வளவில் இலக்குவன், "என்னைப் பெற்ற தாய் மாரும் இத்தன்மையராகவே இருப்பர்," என்று தன்னுள் கூறிக்கொள்கிறான். அவன் உள்ளம் தளர்ச்சி அடைகின்றது; செய்வகை தோன்றாது நீண்ட நேரம் நிற்கின்றான்; பின்பு ஒருவாறு தெளிந்து, தான் வந்த காரியத்தை இயம்புகின்றான்.

அவன் பேசிய பின்பு, பெண்ணரசியாகிய தாரை, "ஐயனே, நீ கோபிக்க வேண்டா; அறிவு முதலியவற்றால் சிறியவர்கள் தீங்கு செய்தால், அவற்றைப் பெரியவனாகிய நீ பொறுத்தலே நேர்மை. சுக்கிரீவன் தான் கொடுத்த வாக்கினை மறக்கவில்லை; வானரப் படைகளைத் திரட்டுவதற்காகப் பலவிடங்களுக்கும்

தூதரை அனுப்பியுள்ளான்; அவை வருவதற்காகவே தாமதிக்கிருன். நீங்கள் அவனுக்குச் செய்த உதவிக்குத் தக்கபடி அவன் உங்களுக்குச் செய்யும் பதில் உதவி இல்லை. நேர்மை பொருந்திய உள்ளமுடைய நீங்கள் சுக்கிரீவனுக்குச் செய்த பேருதவி என்றும் அழியாதிருக்கும்படி அவனை அரசனுக்கிவிட்டீர்கள். அத்தகைய உங்களுக்கு நாங்கள் என்றும் கடமைப்பட்டிருக்கிருேம்,'' என்று மிகவும் பணிவாகவும் அன்பாகவும் கூறினுள். அவ்வளவில் இலக்குவன் உள்ளம் அமைதியுற்றது.

## கம்பர் யார்?

இப்பகுதியை இங்ஙனம் வால்மீகிக்கு மாருகக் கம்பர் தீட்டக் காரணம் யாது? கம்பர் யார்? கம்பர் தமிழர். தமிழகத்தில் ஒரு தமிழனுக்கு—அவனைப் பெற்றவள், வளர்த்தவள், அண்ணன் மனைவி, ஆசிரியன் மனைவி, அரசன் மனைவி ஆகிய ஐவரும் தாய்மாராவர் என்பது தமிழ்நூற் கொள்கை. இதனை நன்கு உணர்ந்தவர் கம்பர். ஆதலால் அண்ணன் மனைவியான தாரையை அவள் கொழுந்தனுன சுக்சிரீவன் மனைவியாகக் கொண்டிருந்தான் என்ற வால்மீகியின் கூற்றைக் கம்பர் வெறுக்கிருர். தமிழர் பண்பாட்டிற்கு இது புறம்பானது; ஆதலால் இதனை மாற்றியமைக்கிருர்; அநுமானும் தொழத்தகும் நிலையில் தாரையை ஒழுக்கத்திற் சிறந்த உத்தமியாக்குகிருர்; சுக்கிரீவன் முதலியோர் அவளைத் தாயென்று கருதித் தொழும்படி செய்கிருர்; இலக்குவனுக்கும் தன் தாய்மார் நினைவு வரும்படி அவளது கைம்மைக் கோலத்தைச் சிறப்பிக்கிருர்.

இவ்வாறு கம்பர் தாம் தமிழர் என்பதைப் பல இடங்களில் உணர்த்திச் செல்கின்ருர்; தம் அரசியல் அறிவை அறிவிக்கிருர்; உரிமை வாழ்க்கை இன்னதென இயம்புகிருர்; பிள்ளைப் பேற்றின் சிறப்பு, இசைக்கலை, காதல்-மோகம், ஊடல்-கூடல் முதலிய இன்ப நிலைப் பகுதிகளை அழகுறக் காட்டுகிருர். சுருங்கக் கூறின், கம்பர் தம்மைப் பல கலை அறிஞராகத் தமது பெருநூலிற் காட்டுகின்ருர். அவரது பெரும் புலமையை இக் கட்டுரைகளில் கண்டு களிக்கலாம். அப்பெருந் தமிழ்ப் புலவருடைய பொன்னுர் திருவடிகட்கு நமது வணக்கம் உரியதாகுக!

# 3. கடவுட் கொள்கை

அமிழ்தினுமினிய தமிழ் மொழியதனை வளர்த்த மாபெரும் புலவராய கம்பர் பெருமான் தாம் இயற்றிய இராம கதையின்கண் தம் அரிய சமயக் கருத்துக் களையும் கடவுட் கொள்கையையும் ஆங்காங்கே தெளிவு படக் கூறியுள்ளார். எனினும், கம்ப ராமாயணத்தை ஊன்றிப் படியாதார்க்கு இவை எளிதிற் புலனுகா என்பது தேற்றம்.

## அரியும் சிவனும் ஒன்று

கம்பர் முதன்முதல் தமது விரிந்த கடவுட் கொள்கையைப் பரந்த அறிவுடன் விளக்குகின்ருர்; ஆற்றுப்படலத்தில் சரயு நதியின் பிறப்பைக் கூறுகை யில், மழையே ஆறு தோன்றலுக்குக் காரணம் என்ருர்; மழை மேகபலத்தால் உண்டாவதென்ருர்; வெண்ணிற மேகம் கடல் நீரை உண்டு கரிய நிறத்தை அடைந்த தென்ருர். அவர்,

> " நீற ணிந்த கடவுள் நிறத்தவான்
> ஆற ணிந்துசென் ருர்கலி மேய்ந்தகில்
> சேற ணிந்த முலைத்திரு மங்கைதன்
> வீற ணிந்தவன் மேனியின் மீண்டவே "

எனத் தெளிவாகக் கூறியுள்ளார். 'சிவபிரானைப் போலச் சென்ற வெண்ணிறப் புயல்கள் கடல் நீரைக் கொண்டதும் திருமால் போலத் திரும்பின' என்பதே இப்பாவின் பொருள். எனினும், இச்செய்யுளின் உள்ளுறையே நாம் ஊன்றிப் பார்ப்பதற்குரியதாம்.

கடல்நீரைக் குடிக்கச் சென்றது வெண்மேகம்; அது நீரற்றது; அதனால் உலகிற்குப் பயனில்லை. அத்தகைய வெண்மேகம் வானில் இருப்பின், மழையின்றி மாநிலத்தார் அல்லலுறுவர். ஆதலின், வெண்மேகம் அழித்தற் கடவுளாய சிவனாரை ஒத்தது. என்னே கம்பர் காட்டும் உவமையின் பெருமை! இவ்வுவமையால் கம்பர் நமக்குக் கூறுவதென்? அவர் கொள்கைதான் யாது? மேகம் என்பது ஒன்று. அஃது உருவத்தாலும் தொழிலாலும் வேறுபாடுடையதாக வெளித்தோன்றினும், மேகம் மேகமேயன்றோ? அத்தன்மையேபோலச் சிவனும் அரியும் தொழில் கருதி உருவ வேறுபாடுற்று நடிப்பவரல்லது உண்மையில் வேறுபட்டுத் தனித்திருப்பாரல்லர். 'அரியும் சிவனும் ஒன்றே' என்று உணர்த்தக் கம்பரது விழுமிய உவமையே கொழுவிய சான்றாக நிற்கக் காண்கின்றோம்.

'என் மதம் சிறந்தது; உன் மதம் தாழ்ந்தது' எனப்பேசி எதிர் வழக்கிடுவோர்க்கும் பாமர மக்களுக்கும் கம்பர் அறிவுறுத்தல் அழகியதே. 'இராமன் கதையைக் கூறப் போந்ததே என் தலையாய நோக்கம் என்று எண்ண வேண்டா; சமயவாதிகளே, உங்களுக்கு உண்மைப் பொருளை உவமை முகத்தான் விளங்கச் செய்யவும் எனது கொள்கையைத் தெரிவிக்கவும் இக்காதையில் விழைந்தேன்' என்று அறி

விப்பவராய்க் கம்பர், அடிக்கடி தம் காவியத்தில் கடவுள் கொள்கையைக் கவின்பெறக் கூறிப்போகும் பெற்றி படித்து இன்புறத்தக்கது.

## ஆறுகளும் சமயங்களும்

சரயு ஆறு இமயமலேயில் தோன்றுகிறது. பரம் பொருளேப்போல அதன் வெள்ளம் முதலில் ஒன்ருக இருக்கின்றது; பிறகு பல சமயத்தவர் அறிவுக்கு உட்பட்டு அப்பரம்பொருள் பல படியாகச் சொல்லப் படுவதுபோலக் குளம், குட்டை, ஏரி, வாய்க்கால், ஆறு என்னும் இடங்களில் எல்லாம் பல படியாகப் பரவி யது. இக் கருத்தைக் கம்பர்,

" கல்லிடைப் பிறந்து போந்து
 கடலிடைக் கலந்த நீத்தம்
எல்லேயின் மறைக ளாலும்
 இயம்பரும் பொருளீ தென்னத்
தொல்லேயில் ஒன்றே யாகித்
 துறைதொறும் பரந்த சூழ்ச்சி
பல்பெருஞ் சமயஞ் சொல்லும்
 பொருளும்போற் பரந்த தன்றே "

எனப் பாடியிருத்தல் படித்து இன்புறத் தக்கது.

நாட்டில் பலவாருகப் பிரிந்து பல துறைகளிலும் பரவிப் பாயும் வெள்ளத்தின் பிறப்பிடம் மலே. அங் ஙனமே உலகில் பலதிறப்பட்டு விளங்கும் சமய நெறி களின் முதல் நிலே தோன்றியது இறைவனிடமே. வெள்ளம் பல கிளேகளாகப் பிரிந்து நிலத்திற் பாய் கின்றது. அவ்வாறே பல சமயங்கள் இறைவன்பால் தோன்றி உலகில் பரவியுள்ளன. பிரிந்த கிளேயாறு

கள் பாயும் நிலத்திற்கேற்ப ஆழமுள்ளவிடத்தில் தேங்கும்; ஆழமற்ற இடத்தில் தேங்கமால் ஓடும். அதுபோல, அறிவுள்ளவர்மாட்டுச் சமயநெறி தேங்கி வளர்ந்தோங்கும் ; அறிவற்றவர்பால் தேங்கி வளராது. இங்ஙனம் பிரிந்து செல்லும் கிளைகள் பலவும் பாயும் நிலத்தின் தன்மையை அடைதல் இயல்பு. அஃதேபோல உண்மையான சமயநெறி மந்த புத்தியுடைய மக்கள்பால் அகப்பட்டு அதன் உண்மைப் பொலிவினை இழந்து நிற்பதும் இயற்கை. பலவாகப் பிரிந்த கிளையாறுகள் முடிவில் கடலிற் சென்று கலக்கின்றன ; மறைகின்றன. அவ்வாறே, உலகில் பலவாருகப் பிரிந்த சமயநெறிகள் சென்றடைவது இறைவனிடமே. அவனிடம் தோன்றி அவனிடமே மறைகின்றன என்பதே கம்பர் கொண்ட கருத்தாகும். இதனுல், அவர் மக்களுக்கு வற்புறுத்துவதுதான் யாது ?

## கடவுள் உண்டு

'எம்மதமும் சம்மதமே' என்ற கொள்கை உங்களிடம் இருக்கட்டும். அதனை மறந்து, உலகில் 'கடவுள் இல்லை' என்று கூறுவோர் உளர். 'உண்டு' என்று உரைப்போரும் உளர். ஆனுல், இதில் எது உண்மை என்பதே ஆராயத்தக்கது. உலகத்தையும், படைப்புப் பொருள்களையும், சுடுகதிர் தண்கதிர் இவற்றையும் காணின், இவற்றை இயக்கும் ஆற்றல் படைத்த ஒன்று இருக்கவேண்டுமென்று அறிகிருேம். எனவே, கடவுள் உண்டென்பது தெள்ளிதில் உணரப்படுகின்றது. உண்மையான தத்துவம் அறிந்த அறிஞர் இதனை மறுக்கார்

இவ்வுண்மையைக் கம்பர் மிக்க அழகாகப் புலவர் வியக்கத் தகுந்தவாறு புலப்படுத்துகின்றார்: "திருமணத்தின் பொருட்டுச் சீதையைப் பெண்கள் அழகு பெற அலங்கரித்தனர். சீதையின் இடைக்கு அழகு செய்ய அம்மாதர் விரும்பினர். அவர்களிற் சிலர், 'சீதைக்கு இடையில்லை' என்றனர் சிலர், 'உண்டு' என்றனர். இடையின்றிப் பெண்ணொருத்தி இருக்க முடியாதென்பது ஒருதலை. ஆகவே, இவ்வுண்மையை உணர்ந்த பின்னர், அம்மகளிர் அறிவுபெற்றுச் சீதையின் இடையை அலங்கரித்தனர். மெய்யறிவு வாய்ந்த மேலோர், "படைக்கப்பட்டுள்ள உலகத்தைக் கண்டு 'படைத்தவன் உளன்' என்ற உண்மையை உணர்ந்ததே போன்று மகளின் தலை-கடைகளை நோக்க 'இடை' உண்டு என்னும் உண்மையை உணர்ந்து- சீதைக்கு இடையுண்டு என்பதை நிச்சயித்து- அதனை அழகுபெறச் செய்தனர்,'' என்று கூறும் கம்பர் மொழிகள் விழுமிய பொருள் அமைந்தவை அல்லவா?

" சில்லியல் ஓதிக் கொங்கைத்
திரள்மணிக் கனகச் செப்பில்
வல்லியும் அனங்கன் வில்லும்
மான்மதச் சாந்தில் தீட்டி
பல்லியல் நெறியிற் பார்க்கும்
பரம்பொருள என்ன யார்க்கும்
இல்லையுண் டென்ன நின்ற
இடையினுக் கிடுக்கண் செய்தார். "

—கோலங்காண் படலம்

இங்ஙனம் மேலும் இரண்டோர் இடங்களில் கம்பர் தமது 'கடவுள் கொள்கையை' இன்னபடியே குறித்துச் செல்கின்றார்.

“பரம்பொருள் ஒன்று உண்டு; அஃது அலகிலா விளையாட்டுடையது; எங்கும் நிறைந்தது; அது தன்னை, நம்பினோர்க்கு வெளிப்படுத்தும், நம்பாதார்க்கு வெளிப்படுத்தாது. வீணான சமய மாறுபாட்டுணர்ச்சி வேண்டா; எம்மதமும் சம்மதமே; எம்மதத்திலும் உண்மை உண்டு” என்பனவே கம்பர் கொண்ட கடவுட் கொள்கையாம். இதனை நமக்கு அவர் முதலிலேயே நமது மனத்திற் பதியச் செய்திருக்கிறார். பாயிரத்தின்கண்ணேயே இதனைக் காணலாம்:

“உலகம் யாவையும் தாமுள வாக்கலும்
நிலைபெ றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யாரவர்
தலைவர் அன்னவர்க் கேசரண் நாங்களே”

என்ற செந்தமிழ்ச் செய்யுள் ஒன்றே கம்பர் கொண்ட கடவுட் கொள்கையை வலியுறுத்தப் போதியதாகும். ‘பிற சமயத்தையோ சமயத்தார்களையோ வெறுத்தல் வேண்டா’ என்ற கொள்கையே கம்பர் வற்புறுத்துவதாம்.

## பரந்த நோக்கம்

எச்சமயமும் உண்மைச் சமயமே என்றும், சமயங்களெல்லாம் ஆண்டவனை அறியப் போந்தனவே என்றும், ஆதலால் மக்கள் இயல்பிற்கு ஏற்றவாறு பல சமயங்கள் இருத்தலில் குற்றமில்லையென்றும், அதனால் சமயவாதங்களை அறவே ஒழித்துப் பரந்த நோக்கத்துடன் அமைந்து இருத்தலே அழகுடைத்து என்றும் கம்பர் உணர்ந்திருந்தார். இவ்வுண்மையை

அப்பெருமான் இராமனைக் கண்ட காரிகையர் நிலையி லிருந்து வெளிப்படுத்துகின்றதை உன்ன உன்ன உவகை பெருகுகின்றது.

> " தோள்கண்டார் தோளே கண்டார் ;
> தொடுகழற் கமல மன்ன
> தாள்கண்டார் தாளே கண்டார் ;
> தடக்கைகண் டாரும் அஃதே;
> வாள்கொண்ட கண்ணார் யாரே
> வடிவினை முடியக் கண்டார் ?
> ஊழ்கொண்ட சமயத் தன்னான்
> உருவுகண் டாரை ஒத்தார். "
>
> —உலாவியற் படலம்

" சீராமன் உலாவி வருவதைக் கண்ட காரிகையர் அவனது திருவுருவத்தினைக் காண விழைந்தனர். அவர்கள் தத்தம் கண்களுக்கு முதலில் புலனாய உறுப் பினை நோக்கினர். அவர்களிற் சிலர் தோள் கண்ட னர் ; அதன் நிலையை முற்றிலும் அறிந்து வேறு உறுப்பினைக் காண முடியாதவராயினர். இங்ஙனமே ஒவ்வொருவரும் ஒவ்வோர் உறுப்பினைக் கண்டு மேற் செல்ல இயலாதவராயினர். அந்நிலை எவ்வாறு இருந்ததெனின், 'ஒவ்வொரு சமயமும் இறைவனின் ஒரு சக்தியைக் கண்டு மயங்கி நிற்கின்றதன்றி அப் பெருமானின் முழுத் தோற்றத்தையும் சக்தியையும் அறிந்தபாடில்லை' என்ற உண்மையை ஒத்திருந்தது," என்று கம்பர் கூறும் விழுமிய பொருள் வியக்கத் தக்கதன்றோ? தோள் கண்டவர் தோளே அழகியது என்று கூறுதல் போல, ஒரு சமயத்தார் தாம் கண்ட உண்மையே மிகச் சிறந்தது என்று கூறுதல் தவறு என்றும், இராமனது ஒவ்வோர் உறுப்பும் எவ்வாறு கண்ணைக் கவரத் தக்கதாயிருந்ததோ, அவ்வாறே

பரம்பொருளைக் காணப்போந்த ஒவ்வொரு சமயத்திலும் உண்மைப் பொருள் ஒளி விடுகின்றது என்றும். இராமன் உறுப்புக்கள் அனைத்தையும் பார்த்து முடிந்தால் இராமன் எழில் நலம் வெளிப்படுதல் போல, பல சமயங்கள் தோறும் கூறுகின்ற உண்மைத் தத்துவங்களை ஒருங்கு சேர்த்து ஆராய்ந்தால் உண்மைப் பரம்பொருளின் தத்துவத்தைக் கண்டறியலாமென்றும் கம்பர் கருதுவது கருத்தில் இருத்தத் தக்கது. என்னே கம்பரின் பரந்த சிந்தையும் விரிந்த நோக்கமும்!

## கம்பர் அறிவுரை

இறைவன் ஒருவன் உண்டு. அவனை அடையப் பல சமயங்கள் உண்டு. அவை அனைத்தும் அவனை அடையவே துணை செய்கின்றன. ஆதலால் சமய வேறுபாடு மக்களிடைத் தலைகாட்டலாகாது. இறைவன் உண்டா இல்லையா என்ற ஆராய்ச்சி பழமையானது; ஆயினும் இறைவன் இருப்பது உண்மை. இந்த உண்மைகளை உணர்ந்து பல சமயத்தவரும் மன ஒற்றுமையோடு வாழ்தல் வேண்டும் என்பதே கம்பர் நமக்குக் கூறும் அறிவுரையாகும். இவ்வுண்மை நமது நாட்டுச் சமயவெறியர்களும் உணர வேண்டுவது இன்றியமையாததன்றோ?



## இவ்வறிவுரைக்குக் காரணம்

பல்லவர் காலத்தில் சைவமும் வைணவமும் சமண-பௌத்தங்களுடன் போராடி, அவற்றின் செல்வாக்கை ஒழித்தன. அதனால் பிற்காலச் சோழர் காலத்தில் சைவமும் வைணவமுமே தமிழகத்தில் செல்வாக்

குற்றன. எனினும், சோழ மன்னர் அனைவரும் சிறந்த சிவனடியார்கள் ஆதலின், சைவமே நாட்டில் தனி யாட்சி புரிந்ததென்னல் தவருகாது. சோழ அரசருள் இரண்டொருவர் வைணவத்தை மிகுதியாக வெறுத் தனர். அவருள் ஒருவன் அதிராஜேந்திரன், அல்லது வீரராஜேந்திரன் ஆவன். இவருள் ஒருவன் காலத் திற்ருன் இராமாநுசர் சோழநாட்டை விட்டு ஹொய் சள நாட்டிற்கு ஓடும் துன்ப நிலைமை உண்டானது.[1]

மற்ருெருவன் சேக்கிழார் காலத்தவரான இரண் டாம் குலோத்துங்கன். இவன் தில்லைக் கோவிந்த ராசரைப் பெயர்த்து அப்புறப்படுத்திவிட்டான்.[2]

இரண்டாம் இராசராசன் 14-ஆம் ஆட்சி ஆண்டில் திருக்கடவூர்க் கோவில் அதிகாரிகள், "இக்கோவிலைக் கண்காணிக்கும் மாகேசுவரர்கள் வைணவரோடு தாராளமாகக் கலந்து பழகினுல். அவர்தம் சொத்துக் கள் கோவிலுக்குப் பறிமுதல் செய்யப்படும்," என்று தீர்மானித்தனர் என்று அக்கோவில் கல்வெட்டு உணர்த்துகின்றது.[3]

கம்பர் காலத்தில் சோழப் பேரரசனுக இருந்த மூன்ரும் குலோத்துங்கன் ஆட்சியில் குகைகள் எனப் பட்ட ஒருவகை மடங்கள் இருந்தன. திருமுறை களில் வல்ல சைவத் துறவிகளைப் பாதுகாப்பதும் திருமுறைகளைப் பிறர்க்குக் கற்பிப்பதும் சிவனடி யார்களை உண்பிப்பதும் அக்குகைகளின் திருப்பணி களாய் இருந்தன.[4]

---

1. Cholas I, p. 354.
2. 363 of 1907.
3. 257 of 1925.
4. 471 of 1912, 233 of 1917

எவர் தூண்டுதலாலோ சோழநாட்டில் மூன்ரும் குலோத்துங்கன் ஆட்சியில் குகையிடி கலகம் ஏற்பட்டது.[5]

சைவத்தின்மீதோ அல்லது குகை அதிகாரிகள் மீதோ வெறுப்புக்கொண்ட சைவரல்லாதார் இக்கலகத்தில் ஈடுபட்டனராதல் வேண்டும்.[6]

இச்சான்றுகளால், அக்காலத்தில் சைவர்க்கும் வைணவர்க்கும் இடையே இருந்த மனக்கசப்பை நன்குணரலாம். நூலறிவிலும், உலகியல் அறிவிலும் இணையற்று விளங்கிய கம்பர் பெருமான், இச்சமயப் போராட்டங்களை நன்கு உளங்கொண்டே சமரச முறையில் தம் கருத்துக்களை எடுத்துக்கூற இராமாயணத்தைக் கருவியாகக் கொண்டார் என்று கூறுதல் பொருந்தும்.

---

5. A.R.E. 1913, p. 112.
6. "Guhai-idi-Kalaham must have been instigated by the Brahmanas against the non-Brahmanical saiva mathas. It is not likely that these latter were altogether suppressed ; for, in the time of Rajaraja III and subsequently they flourished under the patronage of the ruling chiefs and private individuals."—A.R.E. 1913, p. 112.

# 4. உரிமை வாழ்க்கை

## முன்னுரை

பிறரால் தனக்கொரு தீங்கும் நேராதென்னும் கவலையற்ற மனநிலையே உரிமை (சுதந்திர) உணர்ச்சியின் மெய்த்தன்மையாகும். ஆனால், இந்நாளில் இளைஞர் தம் மனம் போனவாறு வாழ்வதையே உரிமை வாழ்வு என்று கருதுகின்றனர். பெரியவருட் பலர் தம் அலுவல்களில் பிறர் இடையீடின்றி வாழ்தலையே உரிமை வாழ்க்கை என்று நினைக்கின்றனர். இந்நிலையிற் கல்வியிற் சிறந்த கம்பர் பெருமான் கூறும் உரிமை வாழ்வைப் பற்றிய உண்மைகளை இங்குக் காண்போம்:

## கோசலத்தில் வாழ்க்கை

'கோசல நாட்டில் குற்றம் ஒன்றும் இல்லை; அதனால் எமன் இல்லை. எல்லோரும் தத்தம் மனத்தில் நன்கு சிந்தித்துச் செயல் செய்வதால், கோபம் என்பதும் இல்லை. நல்ல அறங்கள் செய்வது தவிர, வேறு ஆற்றல் இல்லாதபடியால் உயர்வு தாழ்வு என்ற வேறுபாடு இல்லை,' என்று கம்பர் அழகாக உரிமை வாழ்க்கையைச் சித்திரித்துக் கூறுகின்றார்.

" கூற்றம் இல்லையோர் குற்றம் இலாமையால்;
சீற்றம் இல்லைதம் சிந்தையிற் செய்கையால்;
ஆற்றல் நலலறம் அல்ல திலாமையால்
ஏற்றம் அல்லது இழிதக வில்லையே."

—நாட்டுப் படலம்

கோசல நாட்டு மக்கள் அரசனுக்கு விரோதமான குற்றம், நாட்டுக்கு விரோதமான குற்றம், ஒழுக்கத்திற்கு மாருன குற்றம், குடிக்கு மாருன குற்றம் முதலிய குற்றங்களில் ஒன்றையேனும் செய்திலர். ஆகவே, அவர்கள் எம பயத்திற்கு ஆளாகவில்லை.

குற்றத்தால் வருவது கூற்றம். குற்றமே இல்லாக் கோசல நாட்டில் கூற்றம் ஏது? கூற்றத்தின் பயம்தான் ஏது? மக்கள் குற்றமற்றவர்களாக விளங்கினமையின், அவர்கள் பிறவிப் பேற்றைப் பெற்றவர்களானுர்கள்; 'தெய்வ பயம், மனித பயம்' என்ற இரண்டினையும் கடந்ததொரு தனிநிலையில் வாழ்பவராயினர்; இவ்வாழ்வே உரிமை வாழ்க்கை எனப்படும்.

'சீற்றமில்லை தம் சிந்தையிற் செய்கையால்' என்றதில் விழுமிய சகோதரத்துவம் விளங்கக் காணலாம். சிந்தனை இன்மையால் சீற்றம் வருவதேயன்றி, சீற்றம் சிந்தனையோடு வராது. கோசல மக்கள் எக்கருமத்தையும் சிந்தனையுடன் செய்வதால் சீற்றம் வர ஏதுவில்லை. சீற்றம் இல்லாததால் பகையேது? எல்லோரும் சமத்துவம் எய்தி ஒன்றுபட்ட மனத்தினராய்ச் சமநிலையில் அமர்ந்து வாழ்வர். எனவே, நாட்டின் அழிவிற்கும் குழப்பத்திற்கும் மக்கள்மாட்டுச் சிந்தனையின்றித் தோன்றும் சீற்றமே காரணம்

என்பதை அறியலாம். சிந்தனையோடு மக்கள் எச் செயலையும் செய்வாராயின், சீற்றமே அந்நாட்டில் தலைகாட்டாதொழியும். கோசல மக்கள் சிந்தனையோடு எச்செயலையும் செய்து வந்ததால், சீற்றத்தை வென்றார்கள்; சகோதரத்துவத்தைப் பெற்றார்கள்; ஒருவரோடொருவர் ஒத்த மனத்தவராய் உடனுறைந்து வாழ்ந்தார்கள்.

இச்சகோதரத்துவமும் புறத்தேயிருந்து புகுத்தவல்லதன்று. நம்மாட்டே யிருப்பது; நாமே புகுத்திக் கொள்ளக்கூடியது. 'சகோதரத்துவம் அவர்கள் தர வேண்டுவது, இவர்கள் தரவேண்டுவது' என்பன வெற்றுரைகளே என்க. கம்பர் கூறும் மூன்று நான் கடிகளால், 'கோசல மக்கள் உயர்வு தாழ்வு பெற்றிலர்' என்ற உண்மைச் சமத்துவத்தைக் கூறிப்போந்தார். மக்கள் ஆற்றவல்ல செயல்களால் உயர்வு தாழ்வு ஏற்படுவது இயல்பு; ஆனால், கோசல மக்கள் ஆற்றும் செயலால் உயர்வு தாழ்வு ஏற்படவில்லை. ஏனெனில், யாவரும் நல்லறம் என்னும் ஒன்றையே ஆற்றியதால் உயர்வு-தாழ்வு தோன்றிலது. இதுவே மக்கள் ஒன்று பட்டு வாழ்வதற்குரிய தொழிலாம். எனவே, நல்லறமே செய்த மக்களிடைச் 'சமத்துவம்' நிலவியிருந்தது என்க.

ஆகவே, உலகியல் அறிவு சிறக்கப்பெற்ற மாபெரும் புலவராகிய கம்பர் பெருமான், 'உரிமை வாழ்க்கை' என்பது யாதென்பதை நாலடிப்பாவினால் நலமுற நவின்றுள்ளதை நோக்க நோக்கக் கற்றோர் கழி பேருவகை கொள்வர். இராம காதையைக் கூறு முகத்தான், தாம் கருதிய உண்மைகளை இடங்

களுக்கு ஏற்ப அமைத்து, நமக்கு நல்லறிவு கொளுத்திச் செல்கின்ற கம்பரது திறம் பாராட்டத் தக்கதே.

பிறரால் நீங்கள் உங்கள் உரிமைகளை அடைவதாக நினைப்பது தவறு. பிறர் உங்களுக்குக் கொடுக்க வேண்டுவது ஒன்றுமில்லை. அனைத்தும் உங்களிடத்தே உள்ளன. உங்கள் ஒழுக்கத்தால் எய்தவல்லனவே சமத்துவம், சகோதரத்துவம் முதலியன. உங்கள் உரிமை-நீங்கள் அடைய விரும்பும் உரிமை-உங்களிடத்தே உள்ளது. அது, வெளியில் இருப்பதாக எண்ணித் தேடியலைய வேண்டா—அதன் பொருட்டு உங்கள் வாணுட்களை வீணுட்களாக்க வேண்டா என்று கம்பர் நமக்கு எச்சரிக்கின்ருர்.

மேற்கூறிய செய்யுளோடு தழுவத்தக்க மற்ருென்றையும் புலவர் நமக்குத் தந்துள்ளார். அதனையும் நோக்குக :

“ வண்மை யில்லையோர் வறுமை யின்மையால்
திண்மை யில்லைநேர் செறுநர் இன்மையால்
உண்மை யில்லைபொய் உரையி லாமையால்;
வெண்மை யில்லைபல் கேள்வி மேவலால். ”

—நாட்டுப் படலம்

கோசல நாட்டில் வறுமை என்பது இல்லை; அதனுல் ஈகை என்பதும் இல்லை. கோசல நாட்டினர்க்குப் பகைவர் இல்லை ; அதனுல் அவர்கள் வீரமும் காணப்படவில்லை ; பொய் என்பதும் அங்கு இல்லை ; அதனுல், உண்மை என்பதும் அங்குக் காணப்படவில்லை. எல்லார்க்கும் கேள்வியறிவு பொருந்தியிருந்தது ; அதனுல், அங்கு அறியாமை இல்லையாம்.

என்னே, கம்பர் காட்டும் உயரிய வாழ்வு! நாட்டில் வறுமை இல்லாமையே உரிமை வாழ்க்கையாகும். வறுமை இல்லாதபோது ஈகை எங்கிருந்து தோன்றும்? நேரான பகைவர் இன்மையால், மக்களது வீரம் தோன்றவில்லையாம். கோசல மக்கள் குற்றம் செய்யா தவராதலின் அவர்மாட்டுப் பிறர் பகை கொள்வ தெங்ஙனம்? பகை இருந்தாலன்றோ மக்கள் வீரத்தைக் காட்ட இயலும்! பகையும் இல்லை; வீரமும் இல்லை. மக்களில் ஒருவரேனும் பொய் பேசுவதின்மையால் உண்மை என்பது இல்லாததாயிற்று. பொய் என்பது ஒன்று இருந்தாலன்றோ, அதனினும் வேருன மெய் என்பதை மக்கள் உணர்வர். பொய்யே இல்லாத நாட்டில் மெய் என்று எதைச் சுட்டிக் கூறக்கூடும்? எல்லோர்க்கும் அறிவு நிரம்பியிருந்ததால் அறியாமை இல்லாதொழிந்தது. ஆகவே, ஒரு நாட்டு மக்கள் உரிமை வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டுமாயின், ஒருவரைச் சென்று இறைஞ்சவேண்டா. பிறர் நமக்குக் கொடுப்பதன்று உரிமை வாழ்வு; அதை நாமே செய்துகொள்ளலாம்.

## முடிவுரை

மக்கள் அகத்திலும் புறத்திலும் யாதொரு குற்றமும் செய்யாதிருத்தல் வேண்டும்; அதனுல் தெய்வ பயம், மனித பயம் என்றவற்றினின்றும் நீங்கப் பெறுவர். சீற்றத்தை அறவே ஒழிக்க வேண்டும்; அதனுல் சகோதரத்துவம் எய்தியவராவர். யாவரும் நல்லறத்தை மேற்கொள்ள வேண்டும்; அதனுல் மக்கள் சமத்துவம் எய்தியவராவர். இங்ஙனம் மக்கள் இருப்பின் அந்நாடே உரிமை பெற்ற நாடாகும். அந்

நாட்டார் வாழ்வதும் உரிமை வாழ்வேயாகும். நம் இந்திய மக்களும் கம்பர் கூறும் உரிமை வாழ்வின் கருத்தினை உணர்ந்து அவர் கூறுமாறு நடந்தால் உரிமை என்பது தம்மிடத்தே உள்ளதென்பதை நன் குணர்வர். நாம் முதலில் குற்றமற்றவர்களாக இருத்தல் வேண்டும்; இரண்டாவதாக எதனையும் எண்ணிச் செய்யும் நற்பழக்கத்தை மேற்கொள்ளவேண்டும். அப்போது சீற்றம் முதலிய தீய பண்புகள் நம்மிடம் தலை காட்டா. எனவே, நமக்குள் இருக்கும் பலவித வேறுபாடுகள் நீங்கி நாம் இன்ப வாழ்வை எய்துதல் கூடும்.

# 5. அரசியல் நுட்பம்

புவியரசேத்தும் கவியரசாய கம்பர் பெருமான் தம் இராமகாதையின்கண் அவ்வவ்விடங்களில் அமயம் வாய்க்கும் போதெல்லாம் சிறிதும் மனஞ்சலியாது தாம் உணர்ந்த பல உயரிய கருத்துக்களை நமக்கு விளக்கிக் காட்டுகின்ருர்.

## கொடுங்கோல் அரசர்

நாட்டை ஆளும் நாயகன் எவ்வித இலக்கணத்துடன் இருத்தல் வேண்டும் என்பதைக் கம்பர் விவரிப்பது வியக்கத்தக்கது. குடிகளைத் துன்புறுத்திப் பாக்கு மரத்தை தூக்குமரமாக்கும் அரசர் அரசரோ ? குடிகளின் பெண்டிரைக் கற்பழிக்க முயலும் காவலர் உண்மைக் காவலரோ? தம் மதத்தைப் பரவச்செய்யப் பிற மதத்தாரையும் அவர் தம் கோவில்களையும் பாழாக்கும் வேந்தர் உண்மை வேந்தரா ? ஒற்றுமையின்றித் தம் குலத்துக்குத் தாமே தீமை விளைவித்துக்கொண்ட 'ஜயசந்திரன்' போன்ற தீயபண்புகள் நிறைந்த மன்னர் மன்னரோ ? குடிகளை அச்சுறுத்தி அடக்கு முறையில் ஆளும் அரசர் உண்மை அரசரோ ? அம்மம்ம ! நாட்டு வரலாற்று நூலைப் படித்தாலன்ருே உண்மை

விளங்கும்! அந்தோ ! இத்தகைய கொடுங்கோல் மன்னரால் குடிகள் உற்ற துயர்தான் கூறற்கெளிதோ ? குடிகள் என் நினைந்து ஏக்கமுற்றனரோ! இத்தகைய அரசர் அரசரல்லர். இனிக் கம்பர் கூறும் அரசனையும் அவரது அரசியல் அறிவு நுட்பத்தையும் கவனிப்போம் :

## அளிப்பவன்

கம்பர் தாம் கூறும் அரசியல் நுட்பத்தைத் தயரதன்மேல் ஏற்றிக் கூறுகின்றார் என்பது வெள்ளிடைமலை. அரசன் 'அளிப்பவனே' அன்றி 'அழிப்பவன்' அல்லன். துப்பாக்கி முனையிலும் மூங்கிற் கழிகளின் முனையிலும் குடிகளைத் துன்புறுத்தி ஆளும் அரசன் அரசனுகான். "ஆள்பவன் அரசனுகான் - காப்பவனே அரசன்" என்பதே கம்பர் கொண்ட அரசியல் அறிவின் சாரம். அன்பு வழி காட்ட, அறம் துணை செல்லக் குடிகளுக்குத் தொண்டு பூண்டு ஒழுங்குபவனே உண்மை அரசன். அவன் தன் கடமைகளை உள்ளவாறு உணர்ந்திருத்தல் வேண்டும் ; அவற்றைக் கனவிலும் மறந்தானுகில் அவன், "புவியரசன்று, பூவரசே." குடிகளைக் காப்பதற்குரிய நற்குணங்களே முதலில் அரசன் பெறத்தக்கவை. இவை சிறிதளவும் குன்ருது நிறைவுற்று இருக்கவேண்டும். இன்ன குணங்களை யுடையவனே உத்தம அரசன் என்ற கம்பர் கூற்று, கற்போர் மனத்தைக் களிப்புறச் செய்கிறது.

" ஆதிம் மதியும் அருளும்அற னும்அ மைவும்
ஏதில் மிடல்வீ ரமுமீகையும் எண்ணில் யாவும்
நீதிந் நிலையும் இவைநேமியி னோர்க்கு நின்ற
பாதிம் முழுதும் இவற்கேபணி கேட்ப மன்னோ "

" தாயொக்கும் அன்பில்; தவமொக்கும் நலம்ப யப்பில்;
சேயொக்கும் முன்னின் றெருசெல்கதி உய்க்கு நீரால்;
நோயொக்கும் என்னில் மருந்தொக்கும்; நுணங்கு கேள்வி
ஆயப் புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்."

—அரசியல் படலம்

அன்பைச் செலுத்துவதில் தாய் இணையற்றவள். அரசன் குடிகள்மீது தாய்போல அன்பைச் செலுத்து கின்றான் எனின், அக்குடிகள் வாழ்வு பெருவாழ்வன் றோ? அவரவர் வேண்டியவற்றை வேண்டியவாறே பெறத் தவம் உதவி செய்யும். அவ்வாறே மக்கள் வேண்டியவற்றை வேண்டியவாறே பெற மன்னன் துணை செய்வதால் அவன் தவத்தை ஒத்தவனாவான். ஆகவே, அரசன் இரண்டாவது பேறாகிய 'பொருளுக் கும்' காரணன் ஆகின்றான்.

மூன்றாவதாக, தயரதன் 'சே யொக்கும் முன்னின் றெரு செல்கதி உய்க்கு நீரால்' என்றார் கவி. ஒருவன் இம்மைப் பற்றைவிட்டு மறுமைக்குரிய நெறியிற் பழக மகன் உதவுகின்றான். ஆகவே, தந்தையின் செல்கதிக்கு வழிகாட்டியாயுள்ளவன் மகனே. அவன் போன்று, தயரதன் மக்கள் அறம் பொருள் இன்பத் தில் ஆழ்ந்து விடாது மறுமைக்குரிய நிலைமையையும் அவர் செய்ய வேண்டிய சாதனங்களையும் அமைத்து வைத்துள்ளான். இந்நிலையில் அவன், 'குடிகளின் சேய்க்குச் சமமானவன்' என்று கூறுதல் அமைவு டைத்து. நம் கம்பர் காட்டும் அரசியல் நுட்பம் சால அழகியதே!

நான்காவதாக, தயரதன் 'நோயொக்குமென்னின் மருந்தொக்கும்' என்கிறார். நோயை உண்டாக்குபவ

னும் அரசனே. அந்நோயை மருந்துபோல் உதவிப் போக்குபவனும் அரசனே. என்னே, கம்பர் காட்டும் அரச நிலை! அற்புதம்! அற்புதம்!! இந்நிலையில் வள்ளுவர் வாய்ச்சொல் ஒன்று நம் நினைவிற்கு வருகின்றது. அஃது.

" பிணிக்கு மருந்து பிறமன் அணியிழை
தன்னோய்க்குத் தானே மருந்து"

என்பது.

"சாதாரண நோய்க்கு மருந்து வேறு; இம்மாதரசி தன்னால் விளைந்த நோய்கருத் தானே மருந்துமாகிருள்" என்னும் வள்ளுவர் வாய்ச்சொல்லையே சாருக வடித்துக் கம்பர், 'நோயொக்குமென்னின் மருந்தொக்கும்' எனச் சுருங்கக்கூறி விளங்கவைத்துள்ளார். இக் கருத்தையும், கம்பர் கருத்தையும் ஒப்பிட்டால், தயரதன் குடிகளின் இன்பத்திற்கு ஆதாரமாய் விளங்கிய பரிசு நன்கு விளங்கும். எனவே, அரசனால் விளைந்த நோய்க்கு அவனே மருந்தாக அமைதல் அழகன்றோ? இதனினும் குடிகள் பெறத்தக்க பேறுதான் யாது? இன்பப் பேறு அரசன் நல்க, குடிகள் அதனை யடைந்து இன்புறுதல் எத்துணைச் சிறந்தது!

ஆகவே, தயரதன் உலகத்து உயிர்களை, 'அறம், பொருள், இன்பம், வீடு' என்ற நான்கு பேறுகளையும் அடைவிக்கின்றான். மேலும், நூல்களைக் கேள்வி மூலம் ஆராயுமிடத்து இன்றியமையாத அவ்வவர் அறிவே போல் உடன் நின்று உதவுதல் வியப்பினும் வியப்பே! இதனைக் கம்பர். 'நுணங்கு கேள்வி ஆயப் புகுங்கால் அறிவொக்கும்' எனத் தயரதனைப் பாராட்டும் பரிசும் மகிழத்தக்கதே.

தாயாயும், தவமாயும், சேயாயும், அன்பர் தாமாயும், அவ்வவர் அறிவுமேயாயும் தயரதன் தன் குடிகளுக்கு மட்டுமே அமைந்திலன். உலக மக்கள் அனைவர்க்கும் அவன் அத்தன்மையனே என்பதைக் கம்பர், 'எவர்க்கும் அன்னான்' என வற்புறுத்திக் கூறுகின்றார். இத்தகைய சிறந்த அரசினை ஏழை இந்தியா எக்காலம் பெறுமோ ?

குணத்தாலும் நலத்தாலும் உயர்ந்த தயரதன் வேந்தற்குரிய நாற்படையும் நல்லமைச்சும் வேண்டிலன். அவன் கைவேலே அவனுக்குற்ற துணை; அவன் அறிவே நல்ல அமைச்சு; அரசர்க்கு உளவு அறிய ஒற்றர் என்னும் கூட்டம் ஒன்று உண்டு. அதனையும் கம்பர் காட்டும் கருணைக் காவலன் பெற்றானில்லை. உலகெங்கும் தயரதன் புகழே கூறுவாரன்றி இகழ்வோர் சிலராயின் ஒற்றர் எற்றுக்கு? 'எம் வேந்தன் ஒற்றர் பெற்றிலன். அமைச்சும் படையும் அவனுக்குத் தேவையில்லை; கைவில்லே அவனது துணை; அறமே அவனைக் காக்கும் கவசம்; மநுவினும் மிக்க நீதியுடையான்,' எனக் கம்பர் தாம் காட்டிய தயரதனைக் கோசிகன் புகழ்வதாகக் கூறி மகிழ்கின்றார்.

“ துணையின்றி உயிர்செல்லச்
சுடராழிப் படைவெய்யோன்
பனிவென்ற படியென்னப்
பகைவென்று படிகாப்போன்
தனுவன்றித் துணையில்லான்
தருமத்தின் கவசத்தான்
மனுவென்ற நீதியான்
மகவின்றி வருந்துவான் ”

—குலமுறை கிளத்துப் படலம்

## அரசன் இலக்கணம்

அரசியலின் முற்றிய தத்துவத்தைக் கம்பர் காட்டியுள்ள விதம், கற்பவர் மனதைக் கனியச் செய்யும். 'அரசனும் குடிகளும் தம்முள் வேறுபாடு இன்றி இரண்டறக் கலந்தனர்' என்கிறார் கம்பர். உடலும் உயிரும் சேர்ந்து மனிதனாவது போன்று, குடிகளும் அரசனும் ஒன்றுசேர்ந்து 'அரசியல்' என்ற உருவத்தை அடைகின்றனர். அதனில் அரசன் உடல்; குடிகள் உடலில் தங்கப்பெற்ற உயிர். உயிர் இன்றேல் உடல் ஏது? அங்ஙனமே குடிகள் இன்றேல் கொற்றவன் ஏது? ஆதலின் அரசன் தன் உயிர் போன்ற குடிகளைக் காக்கக் கடமைப்பட்டவன். அவனும் குடிகளும் இரண்டறக் கலந்தனர் என்றால் அந்நாட்டில் இன்பமே இனிய நடம் புரியுமன்றோ? என்னே கம்பர் காட்டும் அரசியலின் சிறப்பு!

> "வயிரவான் பூணணி மடங்கல் மெய்ம்பினான்
> உயிரெலாந் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்,
> செயிரிலா வுலகினிற் சென்று நின்றுவாழ்
> உயிரெலா முறைவதோர் உடம்பு மாயினான்"
>
> —அரசியல் படலம்

'உலகினில் நின்றுவாழ் உயிரெலாம் உறையும் ஓர் உடம்பாயினான்' என்பதே கம்பர் காட்டும் விழுமிய அரசியல் தத்துவம். செங்கோலானும் தண்ணளியானும் ஆகிய மன்னன் இருக்கத்தக்க மாண்பு நிலை இதுவேயன்றோ? வேந்தன் உடலானது பற்றி, தன் அழிவிற்கு வழி தேடாது, உய்வதற்கு வழிதேடக் கடமைப்பட்டவனாகின்றான்; எனவே,

அவன் குடிகளின் நன்மதிப்பைப் பெற வழிதேடு கின்ருன். அவனன்ருே உண்மை அரசன்!

வேந்தன் உடலாயும் குடிகள் உயிராயும் அமை கின்ற வாய்மையை வசிட்டனும் இராமனுக்கு உரைக் கின்ருன்.

## வறிஞனும் அரசனும்

வறிஞன் தன் சிறு வயலில் ஒவ்வொரு பயிராய்ப் பார்த்து வளர்க்கும் பெற்றிபோலத் தயரதன் வையத்து மாந்தரை ஒன்று சேர்த்துப் பாராமல் தனித் தனியே கண்காணித்து வருவதைக் கம்பர் கூறுவது கருதற்பாலது.

> " வையக முழுவதும் வறிஞன் ஓம்புமோர்
> செய்யெனக் காத்தினி தரசுசெய் கின்ருன்"

என்ற கம்பர் கூற்றுப்படித்து இன்புறத்தக்க தன்ருே? " வறிஞன் தன் வயலில் உள்ள ஒரு பயிர் அழியினும் தனக்கு நட்டமாக எண்ணுவான். அதுபோலவே, தயரதன் மக்களுள் ஒவ்வொருவரையும் ஊறு அடையா வண்ணம் காத்து வந்தான்," என்று கம்பர் கூறுதல் எண்ண எண்ண உவகை அளிக்கின்றது.

## 6. இசைக் கலை

### இசையின் சிறப்பு

இசைக் கலையையும் அதன் பெருமையையும் பெரும்பாலர் உணர்ந்திருப்பார். இசையின் அருமையையும் பெருமையையும் ஓர்ந்தே, தமிழர் இசைத்தமிழை முத்தமிழுள் நடுநாயகமாக வைத்துளர். தமிழ் இலக்கிய நூல்கள் இசைத் தமிழிலேயே உள்ளன. இசை, கல் மனத்தையும் கரைந்துருகச் செய்யும் பெற்றி வாய்ந்தது. கற்றோரும் மற்றோரும் இசையின் வயப்பட்டே தீர்வர். அன்பைப் பெருக்கி ஆருயிரை வளர்ப்பது இசை. இசையைக் கேட்டு இன்புறு உயிர்கள் இல்லை என்றே கூறலாம். விலங்குகள், பறவைகள், செடிகள், பாம்பு முதலான உயிர்கள் இசையில் இன்பமடைகின்றன. பால் வேண்டி அழும் பசுங்குழவியும் இசை வயப்பட்டு பாலையும் பசியையும் மறந்து கண்கள் செருக மகிழ்ச்சி அடைகின்றது. இசையின் வயப்படாதோர் அன்பற்றவர் என்றே கூறுதல் அமையும். இசை, வாழ்க்கையின் இன்பத்தை வளர்ப்பதாகும்.

### தமிழ் நூல்களில் இசை

இசையைப் பண்டைத் தமிழ் மக்கள் போற்றி வளர்த்தனர் என்பது பண்டை இலக்கியங்களால் அறி

யப்படும் உண்மை. அரசன் முதல் ஆண்டி ஈருகவுள்ள மக்கள் இசையை வளர்த்து வந்தனர். சில மலர்கள் தம்மீது வண்டுகள் தங்கி இசை பாட மலரும் என்னும் உண்மையை, 'முல்லை, வரி வண்டுத வாய் நெகிழ்ந் தனவே' என்ற 'குறுந்தொகை' அடிகள் நினைவூட்டு கின்றன.

## உலக நிகழ்ச்சிகள்

கண்ணன் கதையிலிருந்து பசுக்களும் எருதுகளும் கன்றுகளும் இசைவயப்படுவன என்பது தெரிகிறது. மாலைப்போது குறுகியவுடன் பல்வேறு இடங்களில் மேயும் பசுக்களை ஒன்று சேர்க்கக் கண்ணன் தன் புல் லாங்குழலை எடுத்து ஊதுவான். குழலோசையைக் கேட்டதும் அவை ஒன்றுகூடிக் கண்ணனை அடை கின்றன. கண்ணன் இசையில் வல்லவன்; இசை இன் பத்தில் ஈடுபட்டவன். வண்டியில் பூட்டப்பட்ட மாடு கள், ஏற்றக் கிணற்றில் வேலை செய்யும் மாடுகள், உழு தொழில் செய்யும் மாடுகள் இனையன, அவற்றோடு தொடர்புடைய மக்கள் பாடும், 'தெம்மாங்கு' முதலிய பாட்டுக்களைக் கேட்டுக்கொண்டே தங்கள் உழைப்பை யும் துன்பத்தையும் மறந்து, இன்பத்தில் ஆழ்ந்த உள் ளத்தோடு உழைக்கின்றதைக் காணுதார் யார்?

பிடாரன் பாம்பின் புற்றினருகிற் சென்று மகுடி ஊதுகிருன். அவ்வின்னோசை, புற்றில் உள்ள பாம் பினை வெளியே கொண்டுவருகின்றது. பாம்பு பிடார னுக்கு முன் இசையில் மயங்கிப் படமெடுத்து ஆடுகின் றது. அவ்வமயம் அவன் அதனைப் பிடித்துக்கொள் கிருன். இவ்வாறு கொடிய விட நாகமும் இசைக்குக்

கட்டுப்படுகிறதெனின், இசையின் பெருமையை என்னென்பது !

தேவார ஆசிரியரும் பிற சைவப் பெரியார்களும் இசை பாடி இறைவனை மகிழ்வித்தனர்; இறைவனையே இசை வடிவத்தில் கண்டனர். "இயலவன் இசையவன்; பண் அவன்" என்றெல்லாம் நாயன்மார்கள் இறைவனைப் பாராட்டியுள்ளனர். ஞானசம்பந்தர் தாளமிட்டுப் பதிகங்களைப் பாடி இறைவனைத் தலந்தோறும் சென்று வணங்கினுர். அப்பர் சுவாமிகளும் சுந்தரரும் அப்படியே இசைபாடி இறைவனைப் போற்றினர். பெண்களும் இறைவனுடைய பல தன்மைகளைப் பாடிக்கொண்டே கழல், பந்து, அம்மானை முதலிய ஆட்டங்களை ஆடினர் என்று சம்பந்தர் பாடல் தெரிவிக்கின்றது. இவ்வாறே இளம்பெண்கள் பூக்கொய்தல்; சுண்ணம் இடித்தல் முதலிய பல வேலைகளைச் செய்து கொண்டே இறைவன் சிறப்புக்களை எடுத்துப்பாடி மகிழ்தல் பண்டை வழக்கம் என்பதைத் திருவாசகப் பாடல்களும் உணர்த்துகின்றன.

மாடுகளை மேய்த்து வந்த ஆனுய நாயனுர் புல்லாங்குழலில் ஐந்தெழுத்தினை ஓதி இறைவனை அடைந்ததாகப் பெரிய புராணம் பேசுகின்றது. திருநீலகண்ட யாழ்ப்பாணரும் திருப்பாணுழ்வாரும் யாழ் மீட்டியும் பாடியும் பேறுபெற்வராவர் என்று நூல்கள் கூறுகின்றன. திருமாளிகைத் தேவர், சேந்தனுர் முதலிய பெரியோர்கள் இசைபாடி ஆண்டவனை வழுத்தினர். அவர் தம் அருட்பாக்கள், " திருவிசைப்பா " என்ற பெயரில் ஒன்பதாந் திருமுறையாக வழங்கப்படுகின்றன.

ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்ருகிய சீவக சிந்தாமணியின் கதாநாயகன் சீவகன். அவன் ஆண்

களைப் பார்க்கலாகாதென்றிருந்த 'சுரமஞ்சரி' என்ற பெண்ணைக் கிழவேடத்துடன் சென்று, இசைபாடி வென்றான். அவன் இசையைக் கேட்டதும் பெண்கள், வேடன் பறவை போல் கத்தும் ஓசையைக் கேட்டு மயங்கிக் கூட்டமாக ஓடி வரும் மயில்களைப்போல் ஓடி வந்தனராம்.

"கள்ள மூப்பி னந்தணன் கனிந்த கீத வீதியே
வள்ளி வென்ற நுண்ணிடை மழைம லர்த்த டங்கணார்
புள்ளு வம்ம திமகன் புணர்த்த ஓசை பேற்புகன்
றுள்ளம் வைத்த மாமயிற் குழாத்தி னோடி யெய்தினார்"

எனக் கவி கூறுவது கருதத்தக்கது.

## கம்பரும் இசையும்

இத்தகைய பெருமை வாய்ந்த இசையைப் பற்றி நம் கம்பர் பெருமான் யாது கூறுகின்றார் என்பதைக் கவனிப்போம் : நாட்டுப் படலத்தில் மருத நிலத்திலும் நெய்தல் நிலத்திலும் எழுகின்ற இசைகள் ஒன்று படுவதை அங்குள்ள உயிர்களேயன்றி, குறிஞ்சி, முல்லை நிலங்களில் உள்ள மக்களும் மற்றைய உயிர்களும் அநுபவித்து உறங்கும் திறத்தினைக் கூறும் செய்யுள் இன்பம் பயக்கின்றதைக் காண்க :

"கொன்றை வேய்ங்குழல் கோவலர் முன்றிலில்
கன்று றக்கும் குரவை கடைசியர்
புன்ற லைப்புனங் காப்புடைப் போதரச்
சென்றி சைக்கு நுளைச்சியர் செவ்வழி"

மருதநிலத்தில் உழத்தியர் பாடும் குரவைப் பாட்டு, முல்லைநில இடையர் இசைக்கும் குழலின் இசையோடு தழுவி, அவர் முன்றிலில் கட்டப்பட்டிருக்கும் கன்று

களைத் தூங்கச் செய்யும்; நெய்தல் நிலத்து வலைச்சியர் பாடுகின்ற செவ்வழி என்ற பண்ணில் பாடும் பாட்டைத் தினைக்கொல்லையில் காவல் காக்கும் குறிஞ்சி நிலப் பெண் கேட்டு இன்றுயில் கொள்வாள் ; அதனால் தினைப்புனக் காவல் அழிகின்றது ; கதிர்களைக் கிளிகள் கொள்ளை கொள்கின்றன.

இத்தகைய விழுமிய பொருள்வாய்ந்த செய்யுளைக் கம்பர் - இசைக்கலையை நண்குணர்ந்த கம்பர் - தம் அரிய அநுபவத்தால் நமக்குக் கூறிவைத்தது போற்றத் தக்கதே. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்ற நானிலங்களும் ஒன்றை ஒன்று அடுத்து இருப்பன ; மருத நிலத்தில் பாடும் இசை, முல்லை நிலத்து இசையோடு ஒன்றுபடுகின்றது. மருதநிலத்தில் உழத்தியர் பாடுவர். முல்லையில் இசைக்கப்படுவது குழல். இவை இரண்டும் ஒன்றுபட்டன என்றால், உழத்தியர் குரலோசை குழலோசையோடு ஒன்றியது என்பதன்றோ பொருள் ? குரலிசையும் குழலிசையும் ஒன்றுபடுதலே சிறப்புடைத்து என்பதனை அன்றோ கம்பர் நமக்கு உணர்த்துகின்றார் ! அவ்வோசை ஒன்றுபட்டு ஒலித்த இனிமையால் கன்றுகள் உறங்கினவாம். கன்றுகளே உறங்குமாயின், மக்கள் இனிமையெய்தி உறங்கக் கேட்பானேன ! நெய்தல் நிலத்துப் பாடும் வலைச்சியர் குரலோசை குறிஞ்சிநிலத் தினைப்புனத்தில் காவல் காக்கும் குறப்பெண்களை உறங்கச் செய்தது என்றார். இங்ஙனம் அன்றோ இசை அமைதல்வேண்டும்! வலைச்சியரும் உழத்தியரும் இவ்வாறு இசையில் வல்லவராயிருந்தனர் எனின், அந்நாட்டு உயர்தரப் பெண்கள் எங்ஙனம் இருந்தனரோ ? என்னே கம்பர் நமக்குத் தரும் இசைவிருந்து !

பாடகர், இனிய மதுவையுண்டு, தமது சிறிய யாழ் இசைத்துத் 'தெள் விளி' என்னும் பண்ணைப் பாடிக் கொண்டு வைகறையில் தெருவழியே செல்வார்கள். அப்பாடலே கோசல நாட்டு மகளிரைத் துயிலினின் றும் எழுப்புவதாம். ஆடவர்க்கு முன் எழவேண்டியவர் 'பெண்டிர்' என்ற கொள்கையை மறவாக் கம்பர், 'அவ்விசை பெண்டிரை எழுப்பியது' என்றார். இசையைக் கூறப்போந்த கம்பர், 'பெண்டிர்தம் பெரு நிலையும்' வற்புறுத்திக் கூறுதல் படிப்போர் உள்ளத்தை மகிழ்விக்கிறதன்றோ? வைகறையில் இசையைக் கேட்டு எழுவதால், தூய மனநிலை இசை இன்பத்தில் ஈடுபடுகின்றது; இறைவனை நினைத்து வழுத்த ஏதுவாகின்றது. என்னே கம்பர் காட்டும் இருபொருள் அழகு!

"தெள்விளி சிறியாழ்ப் பாணர் தேம்பிழி நறவமாந்தி
வள்விசி கருவி பம்ப வயின்வயின் வழங்கு பாடல்
வெள்ளிவெண் மாடத் தும்பர் வெயில்விரி பசும்பொற் பள்ளி
எள்ளருங் கருங்கண்தோகை இன்றுயில் எழுப்பு மன்றே."

## பாடற்பண்பு

மிதிலைக் காட்சிப் படலத்தைக் கூறப்போந்த கம்பர், இசையைப் பெருமைப்படுத்தும் இடம் பெற்றமைக்கு மகிழ்ந்து, தம் எண்ணத்திருந்ததைத் தெள்ளிதில் தெரிவித்துவிட்டார்; இசைபயில் சாலைகளும் நாடக மேடைகளும் மிதிலையில் உண்டு என்றார். நரம்புக் கருவிகளை மீட்டும் வகையும் - பாடும் வகையும் - பாடுவார் கவனிக்க வேண்டுவதையும் இயம்பியுள்ளார்.

"வள்ளுகிர்த் தளிர்க்கை நோவ மாடகம் பற்றி வார்ந்த
கள்ளொழுகு நரம்பு வீக்கிக் கண்ணொடு மனமுங் கூட்டி

தெள்ளிய முறுவல் தோன்ற விருந்தென மகளி ரீந்த
தெள்விளிப் பாணித் தீந்தேன் செவிமடுத் தினிது சென்றார்''

யாழின் நரம்புகளைத் தம் கூரிய நகங்கள் வாய்ந்த தளிர்போன்ற கைகள் நோகும்படி வலித்துச் சுருதி சேர்த்து தாம் பாடும் பாடலின் பொருளை மனத்தில் அநுபவித்து, அவ்வாறு அநுபவிப்பது அவர் கண்களில் தோன்றவும், இளநகை உண்டாயதால் பல்லொளி சிறிது விளங்கவும், 'தெள்விளி' என்னும் இசையில் அமைந்த பாட்டாகிய தேனை இராமலக்குமணருக்கும் கோசிகனுக்கும் விருந்தாகத் தந்தார்; அவர்கள் செவியார உண்டு இனிது போனார் என்று கம்பர் நமக்குத் தரும் விருந்து மருந்தினும் மாண்புடைத்தே! "சுருதி சேர்த்தல் - பாடும் பாட்டின் பொருளை உள்ளவாறு உணர்தல்-உணர்ந்ததை உருக்கமாய் அநுபவித்தல் - அநுபவித்தலால் உண்டாகும் இன்பம் கண்களில் தோற்றுவித்தல் - இசை இன்பம் தோன்ற இளநகை அரும்புதல் இவை அனைத்தும் இசை பாடுவோரிடம் தோன்ற வேண்டுவன" என்பதைக் கம்பர் நமக்கு உணர்த்துகின்றார்.

## ஆடற்பண்பு

பாடலின் அருமையைக் கூறிய கம்பர் ஆடலின் அருமையையும் அழகுபட அறைந்துள்ளார். நடன மாதர் குரல் ஓசையும் வீணையின் ஒலியும் மத்தளத்தின் ஒலியும் ஒன்றோடு ஒன்று பொருந்தியதைக் கம்பர், 'அவை, ஒன்றை ஒன்று தழுவித் தூங்கின' என்றார். அவ்வளவில் நம் கண்களும் தூங்குகின்றன.

"'நெய்திரள் நரம்பில் தந்த
மழலையி னியன்ற பாடல்,

தைவரு மகர வீணை
தண்ணுமை தழுவித் தூங்கக்
கைவழி நயனஞ் செல்லக்
கண்வழி மனமுஞ் செல்ல
ஐயநுண் ணிடையார் ஆடும்
நாடக அரங்கு கண்டார்''

என்ற கம்பர் செய்யுள் கற்பவர் மனத்தைக் கவரத்தக்க தாயுள்ளது. நெய்பூசிய நரம்பிலிருந்து எழுகின்ற இனிய குரலில் மழலைச் சொற்கள் அமைந்த பாடல், வருடப்படுகின்ற மகர வீணையோடும் மத்தளத்தோடும் பொருந்திக் கலந்து தூங்கியது; அவர் அபிநயிக்கின்ற கையைத் தொடர்ந்து கண்கள் புரண்டன; அக்கண் களைப் பின்பற்றி அவர் மனமுஞ் சென்றது; இங்ஙனம் நடன மாதர் ஆடிய நாடக மேடைகளைக் கண்டு மூவ ரும் சென்றனர். ''நடனம் ஆடுகையில் பாடும் பாடல்-வீணையொலியோடும் மத்தள ஒலியோடும் ஒன்றுபடல் வேண்டும்; கை, பாட்டின் பொருளுக்குத் தக்கபடி அபிநயிக்க வேண்டும்; அக்கையைத் தொடர்ந்து கண்கள் புரள வேண்டும்; கண்கள் வழி மனமும் செல்ல வேண்டும்.'' இவையே உண்மையான இசைக் கல்வி யாளர் கவனிக்க வேண்டுவன. இவற்றையே கம்பர் வற்புறுத்துகின்றார்.

## முடிவுரை

கம்பர் இராமகாதையைக் கூறுமுகத்தான் நமக்கு அறிவிக்கும் இத்தகைய அரிய செய்திகள் பல. அவற் றில் இஃதொன்றாகும். இராமகாதை ஒன்றையே கவனியாது, நம்மையும் இடையிடையே கவனித்து நற்செய்திகளை எடுத்துக்கூறும் கம்பர்மாட்டுத் தமிழ் உலகம் என்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்ட தாகும் அன்றோ ?

# 7. மக்கட் பேறு

## குழந்தை இன்பம்

குடும்பம் என்னும் தருவிற்குக் குழந்தையே கொழுங்கனியாகும். எத்துணைத் துன்பங்கள் இருப்பினும் அவை குழந்தையைக் காணும்போது, 'வெயிலவனைக் கண்ட பனிபோல' அகல்கின்றன. குழந்தை தீய குணங்களால் பற்றப்படாது, அன்று மலர்ந்த செந்தாமரை மலர்போன்ற இனிய முகத்தையும், புன்முறுவலையும், மாசற்ற மனத்தையும் கொண்டுள்ளது; தவழ் நடை பயின்றும், மழலைச்சொல் பழகியும், மனங் கரையச் சிரித்தும் ஈன்றோர்க்கு மகிழ்ச்சியை விளைவிக்கின்றது. ஆதலின் இல்வாழ்க்கைக்குச் சிறந்த பேறு மக்கட் பேறேயாம். இச் செல்வத்தைப் பெறாதான் எப் பேற்றைப் பெற்றிருப்பினும் பெறாதவனே ஆகின்றான் என்னும் வள்ளுவர் வாய்ச்சொல் உன்னற்பாலது.

> "பெறுமவற்றுள் யாமறிவ தில்லை; அறிவறிந்த
> மக்கட்பே றல்ல பி ’

குழந்தை தன் சிறு கையால் அளாவிய கூழ் அமிழ் தினும் இனிமையுடைத்து ; குழந்தை தம் உடலைத் தீண்டலால் பெற்றோர் உடற்கின்பம் பெறுகின்றனர்;

அதன் மழலைச் சொல்லைக் கேட்டலால் செவிக்கின்பம் எய்துகின்றனர்.

“ குழலும் யாழும் இனியவெனக்
கூறு வண்ணம் மென்கனிவாய்
மழலை மொழிந்தும் உடற்கின்பம்
மருவ ஓடி மேல்விழுந்தும்
விழையும் அமிழ்தின் மிகவினிமை
விளைய நுகரும் சுவையடிசில்
செழிய சிறுகை யாலளைந்துஞ்
செய்தாள் மோகம் ஈன்றோரை ”

என்னும் சிவப்பிரகாசர் செந்தமிழ்ப்பா (பிரபுலிங்க லீலை) ஈண்டுச் சுவைத்தற்குரியது.

அரசன் முதல் ஆண்டி ஈருகவுள்ள அனைவரும் மக்களை விரும்புகின்றனர். மக்கட்பேற்றால் பெறும்இன்பம் அனைவர்க்கும் ஒருபடித்தேயாம். செல்வன் இடம், பொருள், ஏவல் இனையன பெற்றிருப்பினும், மக்கட் பேறு இலனாயின், யாதும் பெறாதவனேயாவன். துறவோரும் ஒருங்கே அவாவும் மக்களைப் பெறுதலால் உண்டாகும் இன்பம் செப்புந்தரமன்று. பாண்டியன் அறிவுடை நம்பி புகல்வது காண்க :

“ படைப்புப்பல படைத்துப் பலரோ டுண்ணும்
உடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்தும்
நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை இல்லோர்க்குப்
பயக்குறை இல்லைத்தாம் வாழும் நாளே.”

—புறநானூறு

குழந்தை இல்லா இல்லம் பயனற்றதென்பதைக் காலஞ்

சென்ற பெரும் புலவர் மீனுட்சிசுந்தரனுர் தாம் இயற்றிய மாயூரத் தலபுராணத்தில்,

"பண்ணிலாப் பாடல் போலும்
பரிவிலா நட்புப் போலும்
உண்ணிலா நெய்யி லாமல்
உண்டிடும் அடிசில் போலும்
பெண்ணிலாச் சயனம் போலும்
பெயரிலா வாழ்க்கை போலும்
கண்ணிலா வதனம் போலும்
கான்முளை இல்லா இல்லம்"

எனக் கவின்பெறப் பாடியுள்ள திறம் படித்தின்புறத் தக்கது.

இவ்வுண்மையை நன்கு உணர்ந்தவனுதலின், மன்னன், மனைவியரைக் கூடலாகாதெனச் சாபம் பெற்ற பின்னர், மக்கட் பேறின்மையைக் குறித்துக் கவல்கின்ருன். அவன் மக்கட்பேற்றின் மாண்பினைக் கூறுவதாக வில்லிபுத்தூரர் கூறுந்திறம் படித்து மகிழத்தக்கது.

"கல்லா மழலைக் கனியூறல் கலந்து கொஞ்சும்
சொல்லால் உருக்கி அழுதோடித் தொடர்ந்து பற்றி
மல்லார் புயத்தில் விளையாடு மகிழ்ச்சி மைந்தர்
இல்லாதவர்க்கு மனைவாழ்வின் இனிமை என்னும்?"

"மெய்தானம் வண்மை விரதந் தழல்வேள்வி நாளும்
செய்தாலும் ஞாலத் தவர்நற் கதிசென்று சேரார்;
மைதாழ் தடங்கண் மகவின் முகமன்னு பார்வை
எய்தா தொழியிற் பெறுமின்பம் இவணு மில்லை."

—சம்பவச் சருக்கம்

ஒவ்வொரு புலவரும் மக்கட் பேற்றினை இடத்திற் கேற்பப் பாராட்டிப் பாடியிருத்தலை நோக்க, மக்மட்

பேற்றின் மாட்சி இத்தன்மைத்தென இனிது புலனாகும்.

'நளவெண்பா' பாடிய புகழேந்தியாரும் இதை விட்டிலர். 'குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரை அழைத்துக்கொண்டு நின் தாய் வீடு செல்க,' என்ற கொழுநனை நோக்கித் தமயந்தி, 'மக்களைப் பெறலாம்; கணவனைப் பெறலாகுமோ? நின்னைவிட்டுப் பிரியேன்' என, 'கணவனினும் மக்களையே பாதுகாத்தல் சிறந்தது' என்பதைக் கூறுமுகத்தால் நளன் மக்கட் பேற்றின் பெருமையைப் பேசியது உள்ளக் கிளர்ச்சியை உண்டாக்குவதாகும்.

> "பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனும்மற்
> றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
> புக்களையும் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
> மக்களையீங் கில்லா தவர்?"

> "சொன்ன கலையின் துறையனைத்துந் தோய்ந்தாலும்
> என்ன பயனுடைத்தாம் இன்முகத்து—முன்னம்
> குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்
> சிறுகுதலைக் கேளாச் செவி"

## கம்பரும் மக்கட் பேறும்

இங்ஙனம் பல்லோராலும் பாராட்டப்பட்டுள்ள 'மக்கட்பேறு'—நம் கம்பர் பெருமானால் பாராட்டப்படா திருத்தலும் கூடுமோ? அரசியல் முதலிய மாபெருந் துறைகளில் எல்லாம் கை போய புலவர், இல்வாழ்விற் குரிய இப்பேற்றினை அறிந்து மகிழாதவரோ? இல்லை! இல்லை!! அவரும் இது பற்றித் தம் பகுதியைக் கூறியே முடிக்கின்றார்; தயரதன் வாயிலாகத் தாம் கொண்ட

மக்கட்பேற்றின் மாண்பைக் கவினுறக் காட்டி மகிழ்கின்றார்.

## மக்கள் அன்பு

தயரதன் பல்லாண்டுகளாகத் தவித்து அரிதின் பெற்ற தவப்புதல்வர் நால்வருள் அவன் அன்பிற்குப் பாத்திரனான இராமனைக் கோசிகன் அழைத்துச்செல்ல விரும்பினான்; விரும்பி, "நின் மக்கள் நால்வரினும் கரிய செம்மல் ஒருவனைத் தந்திடுதி," என முனிவன் கூறியது, யமனே வந்து 'உன் உயிரைக் கொடு' என்று கேட்டதுபோல இருந்தது என்று கூறிக் கம்பர் கவல்கின்றார். தயரதன் வருந்தியதைவிடப் பதின் மடங்கு கம்பர் வருந்துதலே நயமுடைத்து; "உயிரீர்க்கும் கொடுங் கூற்றின் உளையச் சொன்னான்" என்றார். அத்துடன் விட்டனரா கம்பர்? அவன் துயரத்தை உவமைகளால் விளக்குதல் பின்னும் அழகியது.

"எண்ணிலா அருந்தவத்தோன் இயம்பியசொல்
மருமத்தின் எரிவேல் பாய்ந்த
புண்ணிலாம் பெரும்புழையிற் கனல்நுழைந்தால்
எனச்செவியில் புகுத லோடும்
உண்ணிலா வியதுயரம் பிடித்துந்த
ஆருயிர்நின் றூச லாடக்
கண்ணிழந்தான் பெற்றிழந்தான் எனவுழந்தான்
கடுந்துயரம் கால வேலான்."

—கையடைப் படலம்

பின்னர் ஒருவாறு தெளிந்த தயரதன் அரசமாதவனை நோக்கி, "இவன் படையூற்றம் இலன்; சிறியன்; பாலன்; பணியிதுவேல், யான்காப்பென், பெருவேள்விக் கெழுக" என்றான் என்று கம்பர் கூறுவது,

'கம்பர் தயரதனைப் புத்திர வாஞ்சையால் குமரனுக்கி விட்டனரோ' என ஐயுற்று மகிழவேண்டுபவராக இருக்கின்றோம். இவன் இங்ஙனம் தான் வருவதாகக் கூறவே, மா தவன் புருவம் நெற்றி முற்றச் சென்றன. அது கண்ட வசிட்டன் தயரதற்கு ஆறுதல் கூற, அரசன் இராம இலக்குமணரைக் கோசிகன்பால் விட ஒருவாறு இசைந்தனன்; இசைந்து இருவரையும் கோசிகன்பால் விடுகையில், கோசிகனை நோக்கி, "நற்றாயும் நீ, தனித்தாயும் நீ இவர்க்கு" என்று குழந்தை மனத்தவனாய்க் கூறுந்திறம் நம்மைக் குழையச் செய்கிறதன்றோ? தயரதனைக் குழையச் செய்யும் கம்பர் குழைகின்றார்; நாமும் குழைகின்றோம். என்னே கவியரசரின் தனிப்பெரும் ஆற்றல்!

சீதையை மணந்து மிதிலையினின்றும் இராமன் தயரதனோடும், சேனைகளோடும் வருகையில், சமதக்கினி முனிவரின் மகனான 'பரசுராமன்' திடீரெனத் தோன்றினான்; அவ்வளவே. தயரதன் நடுக்கங் கொண்டான்; பரசுராமன் தான் கைக்கொண்ட வில்லை வளைக்குமாறு இராமனை அறைகூவக் கேட்ட தயரதன் குற்றுயிராயினான்; 'சிவன் வில்லை இறுத்த இராமன், இவன் வில்லை ஒடியாதோ' என்பதையும் ஓர்ந்திலன்; மகனன்பு கரைபுரண்டோட, பரசுராமன் இராமனை யாது செய்வனோ! என அஞ்சியவனாய் அம் மறையவனைப் பணிந்து, "உமக்குச்

"சிவனும் அயன் அரியுமலர்
சிறுமானிடர் பொருளோ?
இவனும்என துயிரும்உன
தபயம்இனி என்றான்"

எனக் கம்பர் கூறிக் குறுநகை கொள்ளல் பாராட்டற் பாலது.

பரசுராமன் தந்த வில்லை இராமன் தாங்கியதும் தயரதன் மயங்கி வீழ்ந்தான். சீராமனே புன்முறுவ லோடு வில்லை வளைத்து அந்தணன் ஆணவத்தை அடக்கினான். அவ்வளவில் மதியிழந்து, தன் வாயிழந்து, அருந்தவன் மறைந்தான். அவன் மறைந்த பின்னர், வையம் காக்கும் தயரதன் மூர்ச்சை தெளிந்து எழுந்தான்; மைந்தனது மாண்புறு வெற் றியை யறிந்தான்; கரையிடற்கரியதோர் உவகைக் கடலெனப் பொங்கினான். பின்னர் அவன் யாது செய்தான்?

"பரிவறு சிந்தையப் பரசு ராமன்கை
வரிசிலை வாங்கியோர் வசையை நல்கிய
ஒருவனைத் தழுவினின் றுச்சி மோந்துதன்
அருவியங் கண்ணெனும் கலச மாட்டினான்"
—பரசுராமப் படலம்

என்று தயரதன் கொண்ட மகிழ்ச்சியைத் தாம் அடைந்ததுபோலக் கம்பர் அகமகிழப் பாடியுள்ளமை பாராட்டத்தக்கது.

தயரதன் பல்லாண்டுகள் பிள்ளையின்றி அரிதின் பெற்ற இராமனை நோக்கிப் பிறந்த அன்று போல மகிழ்ந்தான்; சிவன் வில்லை இறுத்துச் சீதையை மணந்த அற்றைஞான்றும் அகமகிழ்ந்தான்; காவ லரைக் கலக்கி அட்டகாசம் செய்துவந்த பரசுராமனைப் பங்கப்படுத்திய இற்றைஞான்றும் அகமகிழ்ந்தான் எனின், மக்கட் பேற்றால் தயரதன் பெற்ற பேறு யாதென இயம்புவது!

சீராமன் பரசுராமன் வில்லை ஒடித்தது முதல் தயரதன் இராமனைச் சில சந்தர்ப்பங்களில்,

"பூண்டபோர்மழு வுடையவன் நெடும்புகழ் குறுக
நீண்டதோ ளைய"

என விளித்து மகிழ்தலை மேற்கொண்டான்.

பின்னரும் இராமனுக்கு முடிபுனைய 'நாளைக் குறிமின்' என்று கணித மாக்களை நோக்கித் தயரதன்

"வடிமழு வாளவர் கடந்த மைந்தற்கு
முடிபுனை கடிகைநாள் மொழிமின் என்றனன்"

என்பதாகத் தயரதன் மறந்தாலும் தாம் மறவாமல் அவன் கூறியதாகக் கம்பர் கூறி மகிழ்தலே நாம் வியந்து பாராட்டற்குரியது.

சீராமனுக்கு முடி சூட்ட நினைத்திருப்பதைத் தயரதன் வசிட்டன் முதலானவர்க்குக் கூற, வசிட்டன், "அரச, சீதை அம்மை பூமாதினும் நல்லள், புவி மாதினும் நல்லாள், கலை மாதினும் நல்லாள். இராமன் மன்னுயிர்க்கினியன்; கற்றோரும் மற்றோரும் அவனையே உண்ணு நீரினும், உயிரினும் உயர்வாய் உன்னுவர்" என்ருன்.

"மண்ணினு நல்லள் ; மலர்மகள்
தன்னினும் கலையூர்
பெண்ணினு நல்லள் பெரும்பெயர்ச்
சனகியோ நல்லள் ;
கண்ணினும் நல்லன் ; கற்றவர்
கற்றிலா தவரும்
உண்ணு நீரினும் உயிரினும்
அவனையே உவப்பார்."

—மந்திரப் படலம்

## 8. காதலும் மோகமும்

### காதல்-மோகம்

காதலும் மோகமும் ஒன்றெ்ன நினைப்போர் பலர். அவர்தம் கருத்துத் தவறு என்பதைக் கம்பர் தெளிவாகத் தம் இராம காதையில் கூறியுள்ளார். காதல் என்பது தான் விரும்பிய ஒரு பொருளுக்குத் தன்னை அளிக்க வேண்டும் என்னும் ஊக்கம். காதலின் கிளர்ச்சியே அதன் நோயாய்த் தோன்றுகிறது. தன்னை அளித்தாகின்ற வரையில் அந்நோய் தீராது. மோகம் என்பது பிறரைத் தான் அடைய வேண்டும் என்னும் முயற்சி, அதற்கு முடிவேயில்லை. எத்துணை பெற்றாலும் அம்மோகம் தணிந்திலது. "காதல் நோய்க்கு மருந்தில்லை ; மோக நோய்க்கு முடிவில்லை" என்பதே கம்பர் கொண்ட கருத்தாகும்.

### பிரையும் விடமும்

சீதையைக் கொண்டு காதலையும் சூர்ப்பநகையைக் கொண்டு மோகத்தையும் கம்பர் விரிக்கின்ற திறம் வியக்கத் தக்கது. தென்றற் காற்றும், இருளும் மதியமும் இருவரையும் வருத்தின என்றாலும், நோய் ஒவ்-

வொருவரையும் ஒவ்வொரு விதமாக வருத்தியது. காதல் நோயால் சீதை நலிந்தாள். "அவள் கண் வழி புகுந்த காதல் நோய், பாலில் இட்ட பிரைபோல எங்கும் (அவளது உள்ளத்தில்) பரந்தது" எனக் காதல் பரவும் தன்மையைக் கூறினர்; சூர்ப்பநகைக்குற்ற காமக் கனல், "கொடிய நாகத்தின் விஷம் ஏறியது போலப்பரந்தது" என்றார். இதனால் காதல் நோய் நுண்மையது; அஃது அமைதியாகப் பிரைபோலப் பரவும்; மோக நோய் விஷம் ஏறுவதைப்போல் விரைவாக ஏறும் என்பன தெரிகின்றன அல்லவா ?

" மாலுற வருதலு மனமு மெய்யுந்தன்
நூலுரு மருங்குலபோல் நுடங்கு வாள்நெடுங்
காலுறு கண்வழி புகுந்த காதனோய்
பாலுறு பிரையெனப் பரந்த தெங்குமே. "

—*மிதிலைக் காட்சிப் படலம்*

" அழிந்த சிந்தைய ளாயயர் வாள்வயின்
மொழிந்த காமக் கருங்கனல் மூண்டதால்
வழிந்த நாகத்தின் வன்றலை வாளெயிற்(று)
இழிந்த கார்விடம் ஏறுவ தென்னவே."

—*சூர்ப்பநகைப் படலம்*

## அம்பு பாய்வதிலும் வேறுபாடு

சானகியின் காதல் நோயைக் கண்ணுற்ற மன்மதனும் கருத்தோடு ஒரு சரத்தை அவள்மீது எய்தான். அச்செயல் எரிகின்ற நெருப்பில் விறகிட்டதை ஒத்திருந்தது. தாடகை மார்பில் இராமன் விட்ட அம்புதைத்தாற்போலச் சூர்ப்பநகை நெஞ்சில் மன்மதன் விட்ட அம்பு ஊடுருவிச் செல்ல, அவள் உயிர்

வருந்தினாள்'' என்று காதல் நோய்க்கும் மோகத்திற்கும் உள்ள ஏற்றத் தாழ்வைக் கம்பர் அழகாகச் சித்திரித்துக் கூறுகின்றார். காதல் நோய் கொண்டவர்பால் மன்மதனும் இரக்கம் காட்டுகிறான்போலும்! மோக நோய்ப்பட்டார்பால் அவன் கணைகள் ஊடுருவிச் செல்கின்றன.

> "நோமுறு நோய்நிலை நுவல கிற்றிலள்
> ஊமனின் மனத்திடை யுன்னி விம்மினாள்
> காமனும் ஒருசரங் கருத்தின் எய்தனன்
> வேமெரி யதனிடை விறகிட் டென்னவே."
>
> —மிதிலைக் காட்சிப் படலம்

> "தாட கைக்கொடி யாள்தட மார்பிடை
> ஆட வர்க்கர சன்அயி லம்புபோல்
> பாட வத்தொழில் மன்மதன் பாய்கணை
> ஓட வுட்கி உயிருலைந் தாளரோ."
>
> —சூர்ப்பநகைப் படலம்

## உள்ளத்திலும் வேறுபாடு

சீதை, தனக்கு வெப்பந்தந்த தண்மதியைப் பார்த்து, "குளிர்ச்சியான கடலில் தோன்றிய சந்திரனே, நீ எவ்வளவுதான் என்னை வருத்துவதாகத் தோன்றினும், யாரையும் நீ இதுகாறும் கொன்றதில்லை; ஆதலால் கொடியவன் அல்லை; இறத்தலைப் போக்கும் இனிய அமிர்தத்தோடு வந்த நீ கொல்வது எங்ஙனம் அமையும்? அதுவுமன்றி நீ ஒரு பெண்ணோடு பிறந்துள்ளாய் என்றால், பின் நீ என்னைச் சுடத்தான் செய்வையோ!'' எனத் துதித்தாள். இவ்வாறு சந்திரனைப் பெருமைப் படுத்திப் பேசியது அவள் கொண்ட காதல் நோய்க்கு இலக்கணம். சூர்ப்பநகையோ, தனக்கு அதிகமாக

மோக வெப்பத்தைத் தந்து வாட்டிய சந்திரனைத் தின்ன இராகு என்னும் பாம்பினைக் கொண்டுவரத் துணிந்தாள். இதனால் காதல் நோய்க்கும் மோக நோய்க்கும் உள்ள வெப்பத்தின் அளவு கணித்தறி யப்படும் அல்லவா ?

காதல் கொண்டவள் தன் காதலனுக்குத் தன்னை அளிக்கத் தக்க உபாயங்களைச் செய்வாள் ; அக்காத லன் தன்னைத் துறந்தால் அதன்பொருட்டு நைவாள்; ஆயினும் அவனுக்கொரு தீங்கும் செய்யாள். மோகம் கொண்டவளோ, ஆடவன் தன்னை மறுத்தால், அவ னுக்கு ஏதேனும் இடையூறு செய்து தன் பகைமை யைத் தீர்த்துக்கொள்ளுவாள். திங்களைக் கண்ட சீதையின் நினைவும் சூர்ப்பநகையின் நினைவும் கண்டு ஆராயத் தக்கனவே.

சீதை கூறுகின்றாள் :

"கொடியை யல்லைநீ யாரையுங் கொல்கிலாய்
மடிவில் இன்னமு தத்தொடும் வந்தனை
பிடியின் மென்னடைப் பெண்ணொடென் றுலெனைச்
சுடுதி யோகடற் றோன்றிய திங்களே"

—மிதிலைக் காட்சிப் படலம்

சூர்ப்பநகை கூறுகின்றாள் :

"அணவில் திங்களை நுங்கவ ராவினைக்
கொணர்வெ னேடியெ னக்கொதித் துன்னுவாள்"

—சூர்ப்பநகைப் படலம்

சூர்ப்பநகை இராமனைக் கண்ட இரவு உறக்கம் அற்றவளாய் மோகக் கனலில் வெந்துகொண்டிருந் தாள். அப்போது அவள் கார்மேகம் ஒன்றைக்

கண்டாள்; அது இராமனின் உருவம் என எண்ணி அதனைத் தன் மார்பு பொருந்தத் தழுவினுள். என்னே அறியாமை! மோகக் கனல் செய்யும் மூடச் செயல் இது.

"ஆகக் கொங்கையின் ஐயனென் றஞ்சன
மேகத் தைத்தழு வும்மவை வெந்தன."

—சூர்ப்பநகைப் படலம்

சீதையோ, தன் மெல்லிய தனங்களை நோக்கி, "இளைக்காமல் மென்மேல் பருக்கின்ற என் கொங்கைகளே! நீங்கள் விம்மிப் பருத்து என்ன பயனைப் பெற்றீர்? எழுகின்ற சந்திரனை நிகர்க்கும் ஒளியுள்ள முகம் உடையவனும் ஒருவராலும் வளைக்க இயலாத வில்லைக் கையாண்டவனுமாகிய வள்ளல் இராமனது மார்பின் உள்ளே குடைந்துபோய்ச் சேருவதற்கு வேண்டிய தவங்களைச் செய்யுங்கள்" என்று புத்தி மதி கூறுகின்ருள். இதுவல்லவோ அறிவுடைமை!

"இளைக்கலாத கொங்கைகாள்!
எழுந்து விம்மி என்செய்தீர்?
முளைக்கலா மதிக்கொழுந்து
போலும்வாண் முகத்தினுன்
வளைக்கலாத விற்கையாளி
வள்ளல்மார்பின் உள்ளுறத்
திளைக்கலாகு மாகிதான
செய்தவங்கள் செய்மினே"

—கார்முகப் படலம்

## ஆசை-மோகம்

முடிவாகக் கம்பர் சீதை-சூர்ப்பநகை இருவர்தம் விரகதாபத்தையும் நுணுகி ஆராய்ந்து இருவர்தம்

மனத்திலும் இயங்கிய விகாரத்தின் தன்மையைக் கூறி, "ஆசை நோய்க்கு மருந்துமுண்டாங்கொலோ", "மோகத்துக்கோர் முடிவுமுண்டாங்கலோ" என்று கூறி முடிக்கின்றார். காண்க :

" வாச மென்கல வைக்களி வாரிமேற்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள் ;
வீச வீச வெதும்பினள் மென்முலை
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ !"

—மிதிலைக் காட்சிப் படலம்

சூர்ப்பநகையைப் பற்றிக் கூறுகின்றார் :

" ஆகக் கொங்கையின் ஐயனென் றஞ்சன
மேகத் தைத்தழு வும்மவை வெந்தன ;
போகக் கண்டுபு லம்புமப் புன்மையாள்
மோகத் துக்கோர் முடிவுமுண் டாங்கொலோ !"

—சூர்ப்பநகைப் படலம்

# 9. ஊடலும் கூடலும்

ஊடல்-கூடல்

உத்தம இலக்கணங்கள் அமைந்த காதலர் தம்முள் ஊடல் முன்னும், கூடல் பின்னும் நிகழ்வது இயல்பு. இவ்வுண்மையைப் பண்டைத் தமிழ் இலக்கியங்கள் இன்புற இயம்புகின்றன. இதனை நமது வாழ்க்கையிலும் காணலாம். இக்காலக் காதலியர் ஊடினால் உண்மையறியா ஆடவர் பலர் அக்காதலியரை அடித்துத் துன்புறுத்துவர். இஃது அறியாமையே யன்றி வேறன்று. காதலியர் ஊடுதல், கூடுதலில் இன்பம் பயக்கும். ஒரு காரணத்தைக் கற்பித்து அதனால் தலைவி சீற்றங் கொள்ளலும் தலைவனை வெறுத்தலும் ஊடலாம். அவ்வேளை, தலைவன் இதம் பல கூறி, அவள் ஊடலைத் தீர்ப்பான்; உதையும் படுவான். ஆனால் அது குற்றம் அன்று. இங்ஙனம் நிகழ்வன காதலில் நிகழும் குறும்புகள். இவை கூடலுக்கு இன்பம் தருவன. இவ்வுண்மையைக் காதலர் சோதித்து இன்பத்தை நுகர்வாராக. 'ஊடல், கூடல்' என்பன பற்றிப் புவியரசேத்தும் கவியரசாய கம்பர் பெருமான் யாது கூறியுள்ளார் என்பதை காண்போம்:

## ஊடல் விளக்கும் தொல்லை

ஒரு பெண் காதலன்பால் ஊடல் கொண்டவுடனே தான் அணிந்துள்ள நகைகளைக் கழற்றிச் சாளர வழியே வீதியில் எறிந்துவிடுகின்றாள். பின்னர் அவள் சீற்றத்தைத் தணிக்கத் தலைவன் படும்பாடு சொல்லத்தரமன்று. தலைவி ஊடல் தீர்ந்ததும், இருவரும் மாறி மாறிச் சந்தனக் குழம்பைப் பூசிக்கொள்ளுகின்றனர். அது அளவு கடந்து வழிந்து, வீதியில் தேங்கிக் கிடக்கும். ஒவ்வோர் இல்லத்திலும் இந்நிகழ்ச்சி ஒவ்வொரு நாளும் நடத்தலால், வீதியில் மாலைகளும் சந்தனச் சேரும் ஒவ்வொரு நாள் காலையிலும் காணலாம். காலையில் குதிரைமீது செல்லும் மக்கள் இவற்றால் இடர்ப்படுவர். வீதியிற் கிடக்கும் ஊடி நீத்த மாலைகள் குதிரையின் கால்களில் அகப்பட்டுச் சுற்றிக்கொள்வதால், அவை மேற்செல்ல முடியாது தவிக்கின்றன. குதிரை வீரர் கீழிறங்கி நடந்து செல்ல முயல்கின்றனர். ஆனால், அவர் விருப்பமும் நிறைவேறல் எளிதன்று. ஏன்? வீதியில் தேங்கிக் கிடக்கும் சந்தனக் குழம்பு அவர்களை வழுக்கி விழச் செய்கின்றது.

ஊடல் கொண்ட மகளிர் தாம் குடியிருந்த மலர் மாலைகளைத் தெருவில் எறிகின்றனர். அவை நடனம் ஆடுகின்ற மகளிரின் காற்சிலம்புகளில் மாட்டிக் கொண்டு பந்தப்படுத்தி, அச்சிலம்புகளை இலயத்திற்குப் பொருந்த ஒலிக்கவொட்டாது செய்கின்றன. புலவி (ஊடலை) கொண்ட பெண்மணிகள் தங்கள் மார்பிற் பூசியிருந்த சந்தனச் சேற்றை வழித்துத் தெருவில் எறிகின்றனர். அச்சந்தனச் சேறு தெருவில் ஓடுபவர்களை வழுக்கி விழச் செய்கின்றது: கூடினும் காதலர் முன்னாள் இரவு ஊடினும், மறுநாள் இவ்வாறு

காலை அவ்வீதி வழியே செல்வோர்க்குத் துன்பமே என்று காதலர் செய்தியைக் கம்பர் குறுநகையோடு நமக்குக் கூறுகின்ற நயம் பாராட்டத் தக்கது.

> " ஆடுவார் பொருவினூ புரத்தை யார்ப்பன
> சூடுவார் இகந்தஅத் தொங்கல் மாலைகள்
> ஓடுவார் இழுக்குவ ஊடல் ஊடுறக்
> கூடுவார் வனமுலை கொழித்த சாந்தமே."
>
> —நகரப் படலம்

## ஊடலும் கூடலும்

'ஊடல் கொண்ட மாதர், காதலர் எத்துணை வேண்டினும் சிறிது நேரம் தம் ஊடலைத் தீரார்; ஊடல் தீர்ந்து கூடல் வயப்பட்ட மாதர், ஆடவர் கரங்களில் கொடிகள்போல் துவள்வர்' என்ற உண்மையைக் கம்பர் உவமை வாயிலாகக் காட்டும் திறம் கவனிக்கத்தக்கது: "வலி பொருந்திய திண்ணிய தோள்களையும், மிக்க ஒளி விளங்குகின்ற மேனியையும், மலர்ந்த பூமாலைகளையும் ஆடவர் இடத்தில் கூடினரான மயில்போன்ற சாயலையுடைய மாதர்போலச் சில கொடிகள் அசைந்து துவண்டன; சில பூங்கொம்புகள் ஊடல்கொண்ட மாதர்கள்போல் கைக்கெட்டாமல் நின்றன", என்று கூறுமுகத்தான் யாம் முற்கூறிய உண்மையைப் புலவர் புகன்றுள்ளார்.

> " உலந்தது வயிரத் திண்டோள்
> ஒழுகிவாள் ஒளிகொள் மேனி
> மலர்ந்தபூந் தொடையல் மாலை
> மைந்தர்பால் மயிலின் அன்னர்

கலந்தவர் போல ஒல்கி
ஒசிந்தன : சிலகை வாராப்
புலந்தவர் போல நின்று
வளைகில பூத்த கொம்பர் ”

—பூக்கொய் படலம்

இனி, தலைவி ஊடல் கொள்ளவிருக்கும் காரணங்கள் யாவை எனக் கம்பர் கூறுகின்றார் என்பதைக் காண்போம் : சீராமன் திருமணத்திற்காகத் தயரதன் அயோத்திவிட்டுப் பரிவாரத்துடன் மிதிலை நோக்கிச் செல்கையில், வழியில் தங்குகிறான். அங்கு அப்பரிவாரத்தில் உள்ள காதலர் புரியும் திருவிளையாடல்களைக் கம்பர் கூறிப் பெண்கள் ஊடலுறும் காரணங்களையும் கூறுகின்றார்.

‘ஒருத்தி, தன் காதலனுக்குப் பின்புறமாக அவன் அறியாவண்ணம் சென்று அவன் கண்களை மூடுகின்றாள். கண்களை மூடியது இன்னார் என்பதை அறியாத் தலைவன், “யார் அது ?” என்று வினவுகிறான். அவ்வளவே. தலைவிக்கு அக்கேள்வியில் ஐயம் பிறக்கின்றது. “நம்மையன்றி இவன் கண்களை மூடவல்லவர் யார் இருக்கின்றார் ? ஒருவரும் இல்லையே! அங்ஙனம் இருக்க, இவன் ‘யார்?’ என்று கேட்கவேண்டிய தேவை இல்லையே ! இவன் கண்களைப் பொத்தும் உரிமை எனக்கன்றி வேறு ஒருத்திக்கும் உண்டு போலும் ! நன்று ! இதென்ன விந்தை!” என்று நினைந்து. அதுபற்றி அவனிடம் ஊடல் கொள்ளுகின்றாள். ‘இவ்வாறெல்லாம் தலைவி ஊடல் கொள்ளுதலைக் காண்க’, என்று கம்பர் குறுநகையோடு நம்மை நோக்கி நவில்கின்றார்.

"போரென்ன வீங்கும் பொருப்பன்ன
பொலங்கொள் திண்டோள்
மாரன் அனையான் மலர்க்கொய்திருந்
தானை வந்தோர்
காரன்ன கூந்தற் குயிலன்னவள்
கண்பு தைப்ப,
ஆரென்ன லோடும் அழலென்ன
வெதும்பு கின்றாள்."

—பூக்கொய் படலம்

## இளநீர்க்காய் விளைத்த ஊடல்

ஒரு தலைவன் இளநீர்க்காய் ஒன்றை நோக்கி, "அம்மா! இது மங்கையர்தம் கொங்கைகளை ஒத்திருக்கின்றது," என்று வியப்புற்றுக் கூறுகின்றான். அவ்வளவில் தலைவி சினங்கொண்டு, "இவ்விளநீர்க்காய் எந்த மாதர்களுடைய கொங்கைகளை நிகர்க்கும்?" என்று விம்மிக் கொதித்து முகம் வியர்க்கப் பெருமூச்சு விடுகின்றாள். "என்னே! இவன் நமது கொங்கையைச் சுட்டிக் கூறாது, பொதுப்பட 'மாதர் கொங்கைகள்' என்று சொல்லுகிறான். 'மாதர்' என்னும் பன்மைச் சொல் இவன் வாய்வழி வரலாமோ? இவன் மாதர் பலரிடம் நட்புக்கொண்டுளன் போலும்! இதனை நாம் அறியாமற் போனோமே!" என்று மனம் புண்ணாகின்றாள். தலைவன் 'மாதர் கொங்கை' எனப் பொதுப்படக் கூறின், இவள் சீற்றம் கொள்ளக் காரணம் இல்லை; இருப்பினும் இவள் அறியாமையால் சீற்றமும் ஐயமும் கொள்கின்றாள்; மாதர் இயல்பு அஃது என்று கம்பர் கூறுகின்றார்.

"செம்மாந் தெங்கின் இளநீரையொர்
செம்மல் நோக்கி,

> 'அம்மா! இவைமங் கையர்கொங்
> கைகளாகும்' என்ன,
> 'எம்மாதர் கொங்கைக் கிவையொப்பன ?'
> என்றோர் ஏழை
> விம்மா வெதும்மா வெயரா
> முகம்வெய் துயிர்த்தாள்."
>
> —பூக்கொய் படலம்

மாதர் ஊடல் கொள்ளும் பரிசைக் கூரிய கம்பர், அம்மாதர் ஊடல் தீர்ந்து காதலர்பால் காதல் விஞ்சி, அவரை அடைய அவர் செய்யும் முயற்யைசியும் முறுவலோடு விளக்குகின்றார்.

## குயிலைத் தொழுதல்

தன் தலைவனோடு ஊடல் கொண்ட ஒருத்தி, அவனைச் சேர விரும்பியவளாய்த் தான் பறித்துக் கொள்ளக்கூடிய மலர்கள் பல இருந்தும், அவற்றைப் பறியாமல் எட்டாதிருந்த மலரைப்பார்த்து, "இதனைப் பறித்துக்கொடு" என்று குயிலைக் கரங் குவித்து வேண்டுகின்றாள். தான் படும் துன்பத்தைப் பொறாத தலைவன் போந்து மலர் பறித்துத் தன்னுடன் கூடு வான் என்பதே அவள் விருப்பம். கூடலுக்கு மாதர் செய்யும் சூழ்ச்சிகளில் இது ஒன்றாகும்.

> "மைதாழ் கருங்கண்கள்
> சிவப்புற வந்து தோன்ற
> நெய்தாவும் வேலானொடு
> நெஞ்சு புலந்து நின்றாள்
> எய்தாது நின்றம்
> மலர்நோக்கி யெனக்கி தீண்டக்
> கொய்தீதி யென்றோர்
> குயிலைக்கரங் கூப்பு கின்றாள்."
>
> —பூக்கொய் படலம்

மை தீட்டப்பெற்ற கரிய கண்களில் செந்நிறம் மிகவும் தோன்றும்படி நெய் பூசப்பெற்ற வேலேந்திய கணவனோடு மனத்தில் ஊடல் கொண்டிருந்த ஒருத்தி. தன் கைக்கு எட்டாதிருந்த மலரைப் பார்த்து, அதன் மீது கொண்ட விருப்பத்தால், "இஃது எனக்குக் கிடைக்கும்படி பறித்துக் கொடு" என்று குயிலைக் கைகுவித்துத் தொழுதாள்.

## கிளியை விடுத்தல்

மற்றொருத்தி, தன் நாயகன் தன்னைப் பணிந்த போதெல்லாம் ஊடல் தீராது, பின்பு அவன்மேல் விருப்பம் மேலிட்டவளாய், அவனையடைய வழியறியாமல் தயங்குகின்றாள். தலைவன் இருக்கும் இடத்திற்குத் தன் கிளியைப் பறக்கவிட்டு அதனைத் தொடர்பவள் போல் அவன் இருக்கும் இடத்தை அடைகிறாள். மாதர் மடமையை நோக்குங்கள்! கணவன் பணியும்போது மிடுக்குடன் இருக்கும் மாதரார், பின் அவனையடையத் தாமே சூழ்ச்சி செய்து போகும் விந்தை சால அழகுடையதே!

> "யாழொக் குஞ்சொற் பொன்னனை
> யாளோர் இகல்மன்னன்
> தாழத் தாழாள் தாழ்ந்த
> மனத்தாள் தளர்கின்றாள்;
> ஆழத் துள்ளுங் கள்ள
> நினைப்பால் அவனின்ற
> சூழற் கேதன் கிள்ளையை
> யேவித் தொடர்வாளும்"
>
> —பூக்கொய் படலம்

**கூடல் உணர்ச்சி**

ஒருத்தி, தன் தலைவனை அழைத்துவரத் தோழியை ஏவுகிருள்; தோழி மீண்டு வராமையைக் குறித்து மனம் புண்ணுகிருள். மலர்ப்படுக்கையில் படுத்துள்ள வேருெருத்தி, தன் தலைவனின் பெயர்களைச் சொல்லும் கிளியை மனமகிழ்ந்து தழுவுகிருள். ஒருத்தி, தனக்குத் துணையாயிருக்கும் கிளியைத் தழுவி, "என் ஆவி போன்ற நாயகனை நீ அழைத்து வரவில்லை. நீ இருந்து எனக்கு என்ன பயன்? துன்பம் செய்வதில் நீ எனக்கு அன்றிலையே ஒப்பாய்," என்று அழுது சீறுகிருள். தன் கணவனோடு ஊடல் கொண்டு அமளியில் அவனுடன் இருந்த ஒருத்தி, ஊடல் தீர்ந்து கூடல் கொள்ள விரும்புகிருள். அதனைக் கணவன் உணர்ந்தானில்லை. தான் இன்னும் தூங்கவில்லையென்பதையும், உரையாடுவதற்கு ஏற்றவளாய் இருக்கிருள் என்பதையும், அரைத் தூக்கத்தில் சோம்பல் முரிப்பவளைப்போல் பாவனை செய்து, "இப்போது எத்தனை நாழிகை சென்றன?" எனக் கேட்கிருள்.

"தலைவி ஒருத்தி, தன் கணவனை இறுக அணைத்து மலையும் உருவழியும்படி திண்ணியதாகவுள்ள அவன் மார்பில் தன் நகில்கள் ஊடுருவிச் சென்றனவோ என அவளது முதுகைப் பார்த்தாள்" என்று கூறுமுகத்தான் ஊடல் தீர்ந்து கூடும் மாதர் காதலரிடத்துக் கொண்ட கரை கடந்த காதல் நுண்மையைக் கவின்பெறக் கம்பர் காட்டுகின்ருர். இறுக அணைத்தலே காதல் இன்பத்தில் கூடும் தலைவன் தலைவியர் செய்யத்தக்க இன்பச் செயல்.

> "கொலையுரு அமைந்தெனக் கொடிய நாட்டத்தோர்
> கலையுறு அல்குலாள் கணவற் புல்குவாள்

சிலையுரு வழிதரச் செறிந்த மார்பிற்றன்
முலையுரு வினவென முதுகை நோக்கினுள் ''

—உண்டாட்டுப் படலம்

மற்ருெரு தலைவி, தன் ஊடலைத் தணித்துக் கணவனைக் கலந்தணைய விரும்பியவளாய்ப் பொய் யாகச் செய்யும் உறக்கத்தில் கனவு கண்டதாகப் பாவித்து, அதன் உதவியால் கணவனை அணைத்துக் கொண்டாள். இஃது ஊடல் கொண்ட மாதர் கூடல் கொள்ளற்குச் செய்த சூழ்ச்சியே! இதனைக் கம்பர் குறுநகையுடன் கூறும் திறம் வியக்கத்தக்கது.

'' துனியுறு புலவியைக் காதல் சூழ்சுடர்
பணியெனத் துடைத்தலும் பதைக்குஞ் சிந்தையாள்
புனைகுழல் ஒருமயில் பொய்யு றங்குவாள்
கனவெனு நலத்தினுள் கணவற் புல்லினுள்.''

—உண்டாட்டுப் படலம்

ஊடியபின் கூடலே இன்பத்திற்கு ஏற்றதாகும். ஊடல் இல்லாக் கூடல் கூடலாகாது.

'' ஊடுதல் காமத்திற் கின்பம் ; அதற்கின்பம்
கூடி முயங்கப் பெறின் ''

என்ற வள்ளுவர் வாய்ச் சொல்லும் இதற்குச் சான்ருதல் கண்டு களிக்க.

## 10. செய்ந்நன்றி யறிதல்

### முன்னுரை

பெறலருங் குணங்கள் தம்முட் செய்ந்நன்றி யறிதலும் ஒன்றெனச் ஆன்றோர் கூறியுள்ளனர். செய்ந்நன்றியறிதலில் தலைசிறந்தவர் கன்னனும் கும்ப கர்ணனுமேயாவர் என்பது சான்றோர் கருத்தாகும். ஆனால், இராமகாதையைத் தமிழிற் பாடிய கம்பரும் மேற்கூறப் பெற்ற கன்னன் கும்பகர்ணன்—இருவ ரோடு வைத்துக் கூறத்தக்கவர் ஆவர்.

### சடையப்ப வள்ளல்

சடையப்ப வள்ளல் என்பவர் வெண்ணெய் நல்லூரில் வாழ்ந்துவந்த தாளாண்மையிற் சிறந்த வேளாண் மரபினர். அப்பெருந்தகை தம்மை நாடி வந்த எந்நாட்டு வறிஞர்க்கும் ஈதலில் தவறாதவர். அப் பெரியாரே நம் புலவர் பெருமானாய கம்பரை இளமை முதலே பேரன்புடன் பாதுகாத்தவர். கம்பரைச் சோழ வேந்தனிடம் அறிமுகப்படுத்தி, அவரது அளப்பரும் புலமையைத் தமிழ் நாட்டில் நிலவச் செய்தவரும் அவரேயாவர். அவ்வள்ளலே கம்பர் இராமாயணம் பாடி முடித்தற்கும் பெருங்காரணமாயிருந்தனர் எனின்

அவர் கம்பர்பால் வைத்த அன்பின் திறத்தினை யாதென்றறைவது!

## நன்றி மறவாமை

அண்ணல் தமக்குச் செய்த நன்றியை மறவாது உளங்கொண்ட கம்பர், ஒருவராலும் பெறுதற்கரிய பேற்றைத் தாம் செய்யும் பதில் உதவியாக அண்ணலுக்கு அளித்துள்ளார்; உலகம் உள்ளளவும் கம்பர் பெயரும் அவர் பாடிய இராமகாதையும் நிலைநிற்பதேபோல வள்ளல் அறச்செயலும் அருங்குணமும் இராமகாதையில் ஒளிருமாறு செய்துள்ளார். அண்ணல் செய்த உதவியைவிடப் பன்னூறாயிரம் பெரிதெனக் கருதுமாறு, கம்பர் தம் பதில் நன்றியை அண்ணலுக்கு எவ்வாறு அளித்துளர் என்பதை ஈண்டுக் காண்க:

## பயன் தவறாத சொல்

கம்பராமாயணம் வேள்விப் படலத்தில், கோசிகன் இராமனுக்குப் படைக்கலம் அளித்தமை இன்னபடி இருந்ததெனக் கூறுகின்ற கம்பர், "ஊழி பெயரினும் தாம் சொன்ன சொற்களைச் சோரவிடாத பெருமை வேளாளர்க்குரியது; எம் அண்ணல் சடையப்பர்க்கும் அஃதே," என உவமை முகத்தால் விளக்குகின்றார்.

"விண்ணவர் போய பின்றை விரிந்தபூ
மழையி னாலே
தண்ணெனுங் கான நீங்கித் தாங்கருந்
தவத்தின் மிக்கோன்
மண்ணவர் வறுமை நோய்க்கு மருந்தெனச்
சடையன் வெண்ணெய்
அண்ணல்தன் சொல்லே யன்ன படைக்கலம்
அருளி னானே". —வேள்விப்படலம்

"மண்ணுலகத்தாரது வறுமை என்னும் நோய்க்கு மருந்துபோன்ற வெண்ணெய் அண்ணலது சொல்லுக்கு நிகரான அம்புகளைக் கோசிகன் சீராமனுக்களித்தான்," என்று கூறிக் கம்பர் மகிழ்கின்றார். சடையப்பர் வழங்கும் சொற்கள் வாய்மையுடையன; அவை சிறிதும் கெடாமல் கருதிய பயனைத் தருவன; அவை போன்றே கோசிகன் அளித்த படைக்கலங்கள் எய்குறி தவருது வெற்றியைத் தருவன: இத்தகைய வள்ளல் சொற்களுக்கு நிகரான அம்புகளை முனிவன் கோசலக் குரிசலுக்கு நல்கினுன்-என்னும் கூற்றில், கம்பர், 'சடையப்பருடைய சொல் வாய்மை தவருதது என்பதை வலியுறுத்தல் காண்க.

## புகழும் நிலவும்

அடுத்தபடியாக, "அண்ணல் வறுமைப் பிணியைப் போக்கும் திறத்தால் உண்டாகும் புகழ் உலகம் எங்கும் பரவியதாம். அங்ஙனமே வெண்ணிலா உலகெலாம் பரவியது" எனக் கம்பர், வெண்ணிலா, தன் விரி கதிர்களை விரித்த மாண்பினுக்கு வள்ளல் புகழை உவமையாகக் கூறுதல் எத்துணைப் பொருத்தம் உடைத்து! ஏற்ற இடங்களில் வள்ளல் பெருமையை அமைத்துப் பாடும் பெருமை பெற்றவர் கம்பரல்லரோ! தம்மைக் காத்த வேந்தரைப் புகழேந்தியாரும் வில்லிபுத்தூராரும் தாம் பாடிய நூல்களிற் பாடியுள்ளாரேனும், உயர்வு நவிற்சியணி தோன்ற வைத்தே பாடியுள்ளனர். கம்பரோ, அங்ஙனமின்றி வள்ளலது ஏற்றத்தை உள்ளவாறேஉரிய இடங்களிற் பாடியுள்ளார். வள்ளலைச் சிறப்பிக்க, இயலாத வொன்றைப் புதிதாய்ப் புகுத்தக் கம்பர் விழைந்தா

ரில்லை; விழைய இடமுமில்லை; பூணுக்குப் பூண் எதற்கு?

"வண்ண மாலை கைபரப்பி
உலகை வளைந்த இருளெல்லாம்
உண்ண எண்ணித் தண்மதியத்
துதயத் தெழுந்த நிலாக்கற்றை
விண்ணு மண்ணுந் திசையனைத்தும்
விழுங்கிக் கொண்ட விரிநன் னீர்ப்
பண்ணை வெண்ணெய்ச் சடையன்றன்
புகழ்போ லெங்கும் பரந்துளவால்."

—உண்டாட்டுப் படலம்

"விண்ணையும் மண்ணையும் எல்லாத் திசைகளை யும் தன்னுள் அடக்கிக்கொண்ட விரிந்த நன்னீரை யுடைய பண்ணைகள் வாய்ந்த வெண்ணெய்நல்லூரில் வாழும் சடையன் றன் புகழ்போலத் தண்மதியின் கிர ணங்கள் எங்கும் பரவின" எனக் கம்பர் கூறும் உவ மையும் பொருளும் எண்ணியெண்ணிக் களிக்கத் தக்கன அல்லவா? இதனால் வள்ளலது புகழின் விரிவு அங்கைக் கனியெனத் தெள்ளிதின் விளங்குகின்றமை காண்க. "நிலாத் தோன்றுவதற்கு முன்னர் எங்கும் இருள் சூழ்ந்திருந்தது—அதுபோல வள்ளலுக்கு முன் னர் வறுமை நோய் உலகெங்கணும் பரவியிருந்தது; நிலாத் தோன்றிய பின்னர் இருள் இருந்த இடம் தெரி யாமல் மறைந்தது—அதுபோல வள்ளல் தோன்றிய பின் வறுமைப் பிணி ஒழிந்தது. நிலா வெளிச்சம் உல கெலாம் பரவி மக்களை இன்புறுத்துவதுபோல-வள்ள லது வள்ளற்றன்மை உலகெங்கும் பரவி மக்களை இன் புறச் செய்கின்றது" என இத்துணை ஆழ்ந்த கருத் துக்களைக் கம்பர் ஒரு சிறு கவியில் செறிய வைத் துள்ள திறத்தினைக் காண்க.

## அண்ணலது அருட்செயல்

வானர வீரர்கள் கடலில் அணையைக் கட்டுகை யில் உயர்வெற்புகளைத் தூக்கி வானரத் தச்சனாகிய நளன் என்பானிடம் வீச, அலைப்புண்டு வந்த அப்பருப் பதங்களை நளன் 'அஞ்சேல்' எனச்சொல்லி, அவற் றைத் தாங்கி முறையாகவும் அமைதியாகவும் அடுக் கினன். அங்ஙனம் நளன் செய்தமை, "தஞ்சமென் றடைந்தோரைத் தாங்கி தக்கவாறு பாதுகாக்கும் அண்ணலது அருட்செயலை ஒத்திருந்தது" எனக் கம்பர் கூறுவது சால அழகியதன்றோ?

> "மஞ்சினில் திகழ்தரு
> மலையை மாக்குரங் (கு)
> எஞ்சுறக் கடிதெடுத்
> தெறியவே. நளன்
> விஞ்சையில் தாங்கினன்
> சடையன் வெண்ணெயில்
> தஞ்சமென் றோர்களைத்
> தாங்கும் தன்மைபோல்"

—சேதுபந்தனப் படலம்

## வள்ளலும் வறுமைப்பிணியும்

"மேகநாதன் வானரசேனையை நாகபாசத்தால் பிணித்துவிட்டனன். அந்நாகபாசம் கருடனைக் கண்டதும் இற்று ஒழிந்தது அஃது வடமொழி வறிஞரையும், தென்மொழி வறிஞரையும் பிடித்திருந்த வறுமைப்பிணி வெண்ணெய்வாழ் அண்ணலைக்

கண்டதும் இற்றெழிந்ததை ஒத்திருந்தது'' என்று கம்பர் கூறும் உவமையையும் பொருளையும் எண்ணிப் பாருங்கள். இதனுல். வள்ளலின் வள்ளல் தன்மை குன்றின்மீதிட்ட விளக்குப்போல ஒளிர்கிறதன்றே? கம்பர் வீணுகச் சடையப்பரை ஏன் இக்காதையில் இழுக்கிருர் என்று நாம் எண்ணிச் சலிப்படையாவாறு, உவமை வாயிலாகச் சடையப்பரின் அரிய குணத்தையும் செயலையும் கூறித் தமது செய்ந்நன்றியறிதலையும் விளக்குவது கம்பர்மாட்டமைந்த தனிப்பெரும் ஆற்றலேயன்றே!

"வாசங் கலந்த மரைநாள நூலின்
வகையென்ப தென்னை மழையென்(று)
ஆசங்கை கொண்ட கொடைமீளி அண்ணல்
சரராமன் வெண்ணெ யணுகும்
தேசங் கலந்த மறைவாணர் செஞ்சொல்
அறிவாளர் என்றிம் முதலோர்
பாசங் கலந்த பசிபோல் அகன்ற
பதகன் துரந்த உரகம்."

—நாகபாசப் படலம்

இக்கவியால் அண்ணலது ஈத்துவக்கும் தன்மையும், வடமொழி, தென்மொழிப் புலவர் என்ற வேறுபாடின்றி வழங்கும் ஈகைக் குணமும், தாளாண்மையிற் சிறந்த வேளாண் மக்களின் மாண்பும் இவையென இனிது விளங்கும்.

## எவர்க்கும் எட்டாத நிலை

இறுதியாகக் கம்பர், தம்மை வளர்த்து உயர் நிலைக்குக் கொணர்ந்த வள்ளலாரை உலகறிய உயர்ந்த நிலையில்—எவர்க்கும் எட்டாத உயர்நிலை

யில்—அழகுற வைத்துப் பெருமைப்படுத்தியுள்ளார். “இராமனுக்குக் கோசலத்தின் மௌலி சூட்டிய மாண் புறு விழாவில் இராமனைத் தாங்கும் அரியணையை அநுமன் தாங்கினான்; அங்கதன் உடைவாளேந்தி நின்றான்; பரதன் கொற்றக்குடையை கவித்து நின் றான்; இலக்குவனும் சத்துருக்கனனும் கவரி வீசி நின் றனர்; வாசனை கமழும் கூந்தலையுடைய சானகி உவகையோடு அருகிருந்தனள். இந்நிலையில், வெண் ணெய் அண்ணலின் மரபில் வந்த வேளாண்குடிப் பெருமக்கள் மணிமுடியை எடுத்துத் தம் இசைவோடு தர, அதனை வசிட்டன் வாங்கிச் சீராமனுக்குச் சூட்டி னன்.” என்று கம்பர் அழகினும் அழகுபடக் கூறியுள் ளார். இவர் கூற்றில் விழுமிய வேளாளர் சிறப்பு நன்கு விளங்கக் காணலாம்.

“ அரியணை அநுமன் தாங்க,
அங்கதன் உடைவா ளேந்தப்,
பரதன்வெண் குடைக விக்க
இருவரும் கவரி வீச,
விரைசெறி குழலி யோங்க,
வெண்ணெயூர்ச் சடையன் றங்கள்
மரபுளோர் கொடுக்க வாங்கி
வசிட்டனே புனைந்தான் மௌலி.”

—திருவபிடேகப் படலம்

இங்ஙனம் ஈடும் எடுப்பும் இல்லாதவோர் வகை யில் தம் வள்ளலைக் கம்பர் புகழ்வதைக் காண, அவர் வெண்ணெய் அண்ணலிடம் கொண்டிருந்த பெரு மதிப்பு இத்தன்மையதென விளங்குகிறதன்றோ? ‘இனி நீர் சீராமனுக்கு முடி சூட்டலாம்’ என்று வசிட்டனுக்கு அநுமதி கொடுத்தற்கேற்ற பெருமை பெற்றவர்

'சடையப்பரின் முன்னோர்' எனக் கூறுமுகத்தான், 'வேளாளரே அரசனுக்கு உயிர் போன்றவர்' என்னும் உண்மையைக் கம்பர் விளக்குகிறார். இக்கருத்தைக் கொண்டே ஔவையாரும், 'குடி உயரக் கோன் உயரும்' என மொழிந்தார்.

"மேழி பிடிக்குங் கையே
ஆழி வேந்தரை யாக்குங்கை"

என்பது அரசியலின் அடிப்படையான தத்துவம் அன்றோ ?

# 11. மாதர் இடை

## முன்னுரை

இயற்கைப் பேரழகிலும் மாதர்தம் இன்ப உருவ அழகிலும் இயற்கையின்பத்தையும் இறைவன் தோற்றத்தையும் கண்டு களிக்கும் பேறுபெற்றவர் புலவரே. அவர்கள் இயற்றிய நூல்களை நுண்ணறிவோடு ஆராய்ந்து படிப்போரே அதன் இன்பத்தை நுகர முடியும். கம்பராமாயணத்தில் இத்தகைய இன்ப நுகர்ச்சிக்குரிய கவிகள் பல உள. செய்திகளை விளக்கமாகச் சித்திரித்துக் கூறுவதில் நிகரற்றவராய்ப் பெயர் பெற்ற கம்பர் பெருமான் மாதர் இடையைப் பலவிடங்களில் புனைந்துரைக்கும் காட்சி கவனிக்கத் தக்கது.

## ஆடு மகளது இடை

கோசல நாட்டில் காலை நேரத்தில் ஆடல்புரியும் மதங்கியைப் பற்றிக்கூறுமிடத்தில் கம்பர், "நாளுக்கு நாள் தனத்தின் பாரத்தால் அவளது இடை மெலிந்து போகின்றது" எனக் கூறி இரங்குகின்றார். இதை நோக்க நமக்கும் இரக்கம் மிகுகின்றது. இஃதன்றி, "நாடக மேடையில் மடந்தையர் ஆடுவர். அவர்களது

பார்வை காமுகர்களது நெஞ்சை வருத்தவே. ஆடுப வளது இடையைப் போன்று பார்ப்பவர் உயிர் தேய் வடைவதும், அவளது நகிலைப்போல் ஆசை வளர் வதும் நேர்கின்றன," எனக் கம்பர் கூறுவதும் நமக் குப் பின்னும் நகைப்பையும் இன்பத்தையுமே தோற்று விக்கின்றன. ஆடுபவளது இடை தனத்தின் பாரத் தால் தேய்கிறது. அதுபோலவே பார்ப்பவர் உயிர் ஆசையின் பாரத்தில் தேய்கிறது. என்னே கம்பர் கூறும் உவமை!

"அரங்கிடை மடந்தையர் ஆடு வாரவர்
கருங்கடைக் கண்ணயில் காமர் நெஞ்சினை
உருங்குவ மற்றவர் உயிர்கள் அன்னவர்
மருங்குல்போல் தேய்வன வளர்வ தாசையே"

—நகரப் படலம்

## வண்டுகளும் இரங்கும் இடை

ஆடலருமையைக் கம்பர் அமைத்துப் பாடிய பாட லில், 'உண்டோ இல்லையோ என்ற ஐயத்திற்கு இட மான இடையையுடைய நடன மாதர்' என்று நடன மாதர் இடையைக் கூறி வியக்கினருர். மற்ருேர் இடத்தில், "அழகிய பாக்கு மரச்சோலையில், குற்ற மற்ற பவளம்போலச் சிவந்த நிறமுள்ள காய்களை யுடைய மரகத ரத்தினம் போலப் பசிய நிறமுள்ள பாக்கு மரங்களில் ஊஞ்சல்கள் பூட்டப்பட்டுள்ளன. அவ்வூஞ்சல்களில் பெண்கள் அழகாக ஆடிக்கொண் டிருந்தனர். அவர்தம் அழகைக் கண்டு ஆடவர் உள் ளம் காதல் மிகுதியால் அவர்களை விடாது தடுமாறி யது. இவ்வாறு மகளிர் ஊசலில் வீற்றிருந்து விசை

யாக ஆடியபொழுது, அவ்வதிர்ச்சியால் அவர்தம் உடம்பில் அணியப்பட்டிருந்த பூமாலைகளில் மொய்த்துக்கொண்டிருந்த வண்டுகள் மேலெழுந்து பேரொலி செய்தன. இச்செயல், அம்மாதரது மெல்லிய இடை இந்த விசையைப் பொருதென்று இரக்கமுற்று வாய் விட்டு அரற்றுவது போல் இருந்தது,'' என்று கம்பர் கூறும் அழகினை நோக்குக. இதனால், வண்டுகளும் கண்டு இரங்கும் தன்மைத்து மாதர் இடை என்பது புலனாகின்றது.

மகளிர் ஆடுதலால் ஊஞ்சல் முன்னும் பின்னும் மேலும் கீழும் போவதும் வருவதுமாக இருக்கின்றது. இது, மாறிமாறி மேல்கீழாய் ஓடியோடி வருவதும் போவதுமாகக் குறறமிகுந்த பிறப்பின் செயலை ஒத்திருக்கின்றது எனக் கம்பர் கூறுதல் கவனிக்கத்தக்கது. மாசற்ற உயிர் பிறவி எடாது; மாசுற்ற உயிர் பல பிறவிகள் எடுக்கும் என்பது கம்பர் கருத்தாதல் தெளியலாம்.

''பூசலின் எழுந்த வண்டு
மருங்கினுக் கிரங்கிப் பொங்க
மாசறு பிறவி போல
வருவது போவ தாகிக்
காசறு பவளச் செங்காய்
மரகதக் கமுகிற் பூண்ட
ஊசலின் மகளிர் மைந்தர்
சிந்தையோ டுலவக் கண்டார்,''

—மிதிலைக் காட்சிப் படலம்

சீராமனும் சீதையும் ஒருவரை ஒருவர் கண்டனர்; காமுற்றனர். இருவரும் தம் தனிநிலை தீர்ந்து ஒன்று சேர்ந்தனர் என்று கூறுமிடத்தில் கம்பர், 'இடை

யில்லாச் சீதை' எனக் கூறுகின்றார். நுண்ணிய இடையுள்ளவள் என்பது கருத்து.

" மருங்கிலா நங்கையும் வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற் குயிரொன் றாயினர். "
—மிதிலைக் காட்சிப் படலம்

## இடையும் பரம்பொருளும்

சீதைக்கு மணக்கோலம் அணிந்த மங்கையர், "பலவேறு வழிகளால் தேடிப் பார்க்கும் பரம் பொருளைப் போல் யாவருக்கும் 'இல்லை' என்றும், 'உண்டு' என்றும் நின்ற இடை, நகைகள் முதலிய வற்றின் பாரத்தால் துன்பமடையும்படி செய்தார்" என்று கவி கூறுவது, 'பாவை இடையைப் பரம் பொருள் நிலையோடு' ஒப்பிட்டவாறாகும்.

' பல்லியில் நெறியிற் பார்க்கும்
பரம்பொருள் என்ன யார்க்கும்
இல்லையுண் டென்ன நின்ற
இடையினுக் கிடுக்கண் செய்தார். "
—கோலங்காண் படலம்

கடவுள் 'இல்லை, உண்டு' என்று பலவாறு கூறி முடிவில், 'உண்டு' என்ற முடிவிற்கு வருகிறதைப் போல, இடை 'உண்டு' என்ற முடிவிற்கு மாதர் வருகின்றனர்; அத்தகைய ஐயத்தை விளைவிக்கும் இடைக்கு அணி செய்தனர். இதுவரை, இடையைப் பற்றி நகைப்போடு கூறிவந்த கம்பர், இங்கு இடையைக் கூறுமுகத்தான் கடவுள் நிலையையும் தெளிவு படக் கூறியுள்ளமை பாராட்டற்பாலதன்றோ?

### கொடியிடை

பின்னும் ஓர் இடத்தில் மாதர் இடையை வஞ்சிக் கொடிக்கு ஒப்பிடுகின்றார் புலவர். வஞ்சிக்கொடி ஒல்கி ஒசியும் தன்மையுடையது. இடையும் அன்னதே என்று கம்பர் கூறுகின்றார்.

> " வஞ்சிபோல் மருங்கு லார்மாட்
> டியாவரே வணங்க லாதார் ?"
>
> —பூக்கொய் படலம்

'முறிந்துவிடுமோ இது என்னும் அச்சத்தைக் கண்டவர் அடையும்படி நுண்மையாயிருக்கின்ற இடை' என்று கம்பர் பின்னோர் இடத்தில் கூறுகின்றார்.

> " அச்சநுண் மருங்கு லாள் "
>
> —உண்டாட்டுப் படலம்

பின்னொருகால், " இல்லாதிருந்தும் இருப்பதாகப் பொய்யைச் சொல்லிக்கொண்டு அலைகின்ற இடுப்பை யுடைய ஒருத்தி " எனக் கம்பர் குறிக்கின்றார். தான் இடையையுடையவளாக அவள் பொய் சொல்வதாகக் கூறும் திறம் வியக்கத்தக்கதே !

> " பொய்த்தலை மருங்குலாள் "
>
> —உண்டாட்டுப் படலம்

### துடி இடை

இராமனைக் கண்ணுற்ற மிதிலை நகர் மாதரில் ஒருத்தியைப் பற்றிக் கம்பர் கூறுகையில், " உடுக்கை போல் இடை மெலிந்து மென்மையான இடுப்பை உடையாள் " என்கிறார். ஆகவே, இடைக்கு உடுக்கை உவமையாயிற்று.

"தொய்யில் வெய்ய முலைத்துடி போலிடை"
—உலாவியற் படலம்

மற்றோர் இடத்தில் சீதையைக் குறிக்கையில், "(நகில்களின் பாரத்தால்) தேம்புகின்ற சிறிய இடையையுடைய சீதை என்று கூறியுள்ளார்.

"தேம்பு சிற்றிடைச் சீதை"
—உலாவியற் படலம்

பின்னர், இராமன் இலக்குவனோடும் சீதையோடும் காடேகியதைக் குறிக்கையில் கம்பர், "பொய்யோ எனறு ஐயுறத்தக்க இடையையுடைய சீதையோடும் இளையானோடும் சென்றான்" என்கிறார். "இடை யிருப்பதே ஐயம்" என்பதே இதன் பொருள்; அதாவது, அவ்வளவு நுண்ணிய இடை என்பது பொருள்.

"பொய்யோஎனும் இடையாளொடும்
இளையானொடும் போனான்"
—கங்கைப் படலம்

### மருங்கிலா நங்கை

மூக்கறுபட்ட சூர்ப்பநகை மோகம் ஆறாதவளாய் இராமனை நோக்கி, "உனக்குச் சீதையுள்ளாள். இலக்கு வனுக்கு ஒருத்தியும் இல்லை. ஆதலால் என்னைச் சேர்த்துவிடு. மூக்கறுபட்ட என்னை எவ்வாறு மனைவி யாகக் கொள்வது என இலக்குவன் தயங்கினால்' இடையென்பதே இல்லாதவளோடு (சீதையோடு) நீ நெடுங்காலம் கூடி வாழ்வதை அவனுக்கு எடுத்துக் கூறிச் சமாதானம் செய்வாய்" என்றாள். என்னே,

சூர்ப்பநகை கூறும் சமாதானம்! சீதைக்கு இடை இல்லை என்றே அவள் நம்பினுள் போலும்!

"......... இளையவன்தான் அரிந்த நாசி
ஒருங்கிலா இவளோடும் உறைவனே
என்பனேல், இறைவ! ஒன்றும்
மருங்கிலா தவளோடும் அன்றோநீ
நெடுங்காலம் வாழ்ந்த தென்பாய்"

—சூர்ப்பநகைப் படலம்

பின்னர்ச் சீதையின் உருவெளித் தோற்றத்தைக் கண்ட இராவணன் கூறுவதாகக் கம்பர் கூறுவது கவனிக்கத்தக்கது: "புடை பெயர்ந்து தோன்றும் தனங்களையும் அல்குலையும் சேர்ந்து நிற்கும் சீதையின் இடை கண்டிலேம்; மற்றவையெல்லாம் கண்டேம்" எனக் கதறுகிருன் இராவணன் என நகைத்துக் கூறுகிருர் கம்பர். இதனுலும் இடையின் நுண்மை தெரிகின்றதன்றே?

"புடைகொண் டெழு கொங்கையும்
அல்குலும் புல்கி நிற்கும்
இடைகண் டிலம் அல்ல தெல்லா
வுருவம் தெரிந்தாம்"

—மாரீசன் வதைப்படலம்

இவற்ருல், சிறிய இடையே மாதரைச் சிறப்பிப்ப தென்பதையும் நுண்ணிடையுடைய மாதரே உத்தம இலக்கணம் அமைந்தவர் என்பதையும் கம்பர் அறிவிக்கின்ருர். கம்பர் மேலும் பல்வேறு இடங்களில் இடையின் தன்மையைக் கூறிச் செல்கின்ருர். இவ்விடங்களைப் படித்து இன்புறல் கற்றறிந்த மாந்தர் கடன்.

# 12. காதல் மணம்

## புதியது புகுதல்

இராமகாதையை முதன் முதல் வடமொழியில் எழுதியவர் வால்மீகியாவர். அவரைப் பின்பற்றித் தமிழ் மொழியில் கம்பநாடர் இராமகாதையைப் பாடினு ரெனினும், இடங்களுக்கேற்பத் தம் விழுமிய கொள் கைகளேயும், உண்மைகளேயும் வேளாண் சிறப்பையும் தமிழர் நெறியையும், பிறவற்றையும் கூறிப்போந் தார். இராமகாதையில் தமிழர் மண முறை வாடை வீசும் இடம் மிதிலேக்காட்சிப் படலமே ஆகும். இராம னது திருமணத்தைக்கூறப்போந்தவால்மீகி, 'இராமன் அரக்கியைக் கொன்று, மறையவன் வேள்வி காத்து, அகலிகையின் சாபம் தொலேத்து, நேரே மிதிலேயிற் சென்றுவிட்டான். கோசிகன் இராம லக்குமணரைச் சனகனுக்குக் காட்டி, அவர்கள் வரலாற்றைக் கூறி, வில்லேக் கொணரச் செய்தான் என்ருர். எனவே, வால்மீகி இராமாயணத்தில்', மணத்தின் முன்னர்ச் சீதையை இராமன் காணவில்லே என்பதும், சீதை இராமனேக் காணவில்லே என்பதும் பெறப்படுகின்றன.

கம்ப நாடரோ, தாம் வளர்த்த சீதையையும், இராமனையும், வால்மீகியைப்போல் திருமணத்திற்கு முன் இருளில் வைத்திலர். திருமணத்திற்கு முன்னரே—வில் இறுத்தற்கு முன்னரே காதலர் ஒருவரை ஒருவர் சந்திக்கச் செய்தார்; இருவர் மனத்தையும் ஒன்றுபடச் செய்தார்; ஒருவர் மற்றவர் உள்ளத்தில் மாறிப் புகும்படி செய்தார்; திருமணம் வரையில் இருவரையும் காதல் நோயால் மெலிவுறும்படிச் செய்தார்; பின்னர்க் காதல் மணத்தைக் கவின்பெற நடத்திக் காட்டுகின்றார். இத்தகைய மணமுறை பண்டைத் தமிழகத்தில் பழக்கத்தில் இருந்தது என்பது தமிழ் நூல்களை ஆராய்ந்தோர் கண்ட உண்மை. எனவே, கம்பர் தமிழ்நாட்டுத் தமிழர் மணத்திற்கிணங்க, இராமனையும், சீதையையும் சிறக்க வைத்துள்ளார் என்பது எவரும் மறுக்க இயலா உண்மையாகும். இனிக் காதலர் சந்திப்பும் திருமண முடிவும் காண்போம் :

காட்சி

கோசிக முனிவனோடு இராம லக்குமணர் மிதிலையின் இயற்கை அழகையும், செயற்கை அழகையும் கண்டுகொண்டு சென்றனர். அவ்வாறு போகும் பொழுது பல இடங்களைக் கண்டு சென்றவர், ஜனகன் அரண்மனை அணுகியதும், சற்றே நிற்கலாயினர். அவர் நிற்க நேர்ந்த காரணம் என்னை ? கம்பர் அருகிருந்து கண்டவரேபோல் கூறுகின்றார் : 'கன்னி மாட முற்றத்தில் ஆண் அன்னமும் பெண் அன்னமும் ஆடிக்கொண்டிருந்தன. அவற்றைக் கண்ணுற்றுச் சனகன் மாமகள்-பொன்னின் ஒளியும்

மலரின் மணமும், உண்கின்ற தேனினது இனிய சுவையும், பொன்னுக்கும், மலருக்கும், தேனுக்கும் இயற்கையாக அமைந்திருப்பதுபோல் செவ்விய தென் மொழியாகிய தமிழ்க் கவியில் பொலியும் இன்பமே போன்றவள் (சீதை) நின்றிருந்தாள். அவளைக் கண்டு, அங்கு மூவரும் நின்றனர்.''

''பொன்னின் சோதி போதினி
 னாற்றம் பொலிவேபோல்
தென்னுண் டேனிற் றீஞ்சுவை
 செஞ்சொற் கவியின்பம்
கன்னிம் மாடத் தும்பரின் மாடே
 கழிபேடோ(டு)
அன்னம் ஆடும் முன்றுறை
 கண்டங் கயனின்றார்''

—மிதிலைக் காட்சிப் படலம்

அன்னங்கள் முன்றிலில் ஆடி இராவிடின், இராமன் அயல் நிற்க வேண்டிய நிமித்தமில்லை. ஆயினும், அவன் ஆடிய அன்னத்தைக் கண்ணுற்று நின்றானே? விடை பகருதல் எளிதே. ஆடும் அன்னத்தைக் காண்பதேபோல, மிதிலை அன்னத்தை-செஞ்சொற் கவியின்பமாய சானகியையே இராமன் கண்ணுற்று நின்றான்.

செஞ்சொற்கவி இன்பமாய சீதை, தன்பால் அன்புடைய தாதியர் முதலிய மங்கையர், 'மானே, தேனே, அரிய அமிர்தமே' என்று தம் தளிர்போன்ற சிவந்த கைகளால் அவளுடைய அடிகளை வணங்கி, அவள் செல்லுமிடத்து எல்லாம் எதிரே மலர்களை அடர்த்தி யாகத் தூவி, வரிசையாய் நெருங்கிவர, பூவிலே தங்கும் இலக்குமியைப்போல நடமாடி விளங்கு

கின்ருள்' எனக் கம்பர் சீதையின் எழில் நலத்தை நாம் என்றும் மறவாதவாறு வருணித்துள்ளார்.

> "தந்நே ரில்லா மங்கையர்
> செங்கைத் தளிர்மானே,
> அன்னே, தேனே, யாரமிர்
> தேயென் றடிபோற்றி
> முன்னே முன்னே மொய்ம்மலர்
> தூவி முறைசாரப்
> பொன்னே சூழும் பூவின்
> ஒதுங்கிப் பொலிகின்ருள்."
>
> —மிதிலைக் காட்சிப் படலம்

## உள்ளப் புணர்ச்சி

இங்ஙனம் நின்ற சீதை இராமனைக் கண்ணுற்ருள். இராமனும் அவளைக் கண்ணுற்ருன். சானகி இராமனை நோக்கிப் புன்னகை புரிந்தாள் என்று தெரிகின்றது. எங்ஙனம் எனின், அன்று மாலை இராமன்,

> "வாள்நி லாமுறுவல் கனிவா யமுதங்
> காண லாவதோர் காலமுண் டாங்கொலோ ?"

என்று சீதையை நினைத்துப் புலம்புகின்ருன் ஆதலின் என்க.

இராமனும் புன்முறுவல் பூத்தனன் என்பது பெறப்படுகின்றது. எங்ஙனமெனின், சீதை இராமனை நினைந்து காதல் நோயால் புலம்புகையில், 'முந்தியென் உயிரையும் முறுவல் உண்டதே!' என இரங்குகின்ருள். எனவே, காதலர் இருவரிடமும் முறுவல் தோன்றி மகிழ்ச்சியை ஊட்டியுள்ளது என்பதை அறிகின்ருேம். கண்ணுக்கும் கருத்துக்கும் இயைந்த காதலர் முகத்தில் முறுவல் தோன்றுவது இயல்பே அன்ருே!

இவ்வாறு, கண்ணால் களவு செய்து முறுவல் புரிந்த இருவரும் எதிரெதிர் நோக்கிய தன்மை இன்னபடி இருந்தது என்று கம்பர் தம் அகத்தால் சித்திரித்துக் கூறுகின்றார்:

"எண்ணுவதற்கரிய நலங்கள் வாய்ந்த சீதை இவ்வாறு நின்றிருந்தபொழுது, ஒருவர் கண்ணோடு மற்றவர் கண்கள் ஆர்வத்தால் கவ்வி ஒன்றை ஒன்று உண்டு விழுங்கியதால் அவர்களது உணர்வும் தனித்தனி நிலையில் நிற்பதற்கு ஆற்றாவாய், ஒன்றாய்க் கலந்துவிடும்படி அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்.

> "எண்ணரு நலத்தினாள் இனைய நின்றுழி
> கண்ணொடு கண்ணிணைக் கவ்வி யொன்றையொன்(று)
> உண்ணவு நிலைபெறா துணர்வும் ஒன்றிட
> அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்"
>
> —மிதிலைக் காட்சிப் படலம்

என்று கம்பநாடர் கூறுவதை எண்ண எண்ண, மெய்க் காதலின் தத்துவம் இற்றென இனிது விளங்கும். 'இந் நாடகக் காட்சியைக் கண்ணுறப் பேறு பெற்றிலேம் யாம்' என அறிஞர் ஏங்குவர் எனல் பொருந்தும். காதலின் கருத்தைக் கூறும் கம்பர் திறமே போற்றற் குரியது. கம்பர் பெருமான் காதலர் பார்வையின் குறியும் வேகமும் இத்தன்மையதென்று அடுத்த செய்யுளில் விரிக்கின்றார்.

"சீதை பார்த்த பார்வையென்னும் கூர்மை பொருந்திய இரண்டு வேல்களும் வலியமைந்த இராமனின் இரு தோள்களிலும் தைத்தன. ஒலிக்கின்ற கழல் கட்டிய வீரனுடைய சிவந்த கண்களும் அணங்கை ஒத்த சீதையின் தனங்களில் தைத்தன" என்ற கூற்று,

தமிழ் அகப்பொருள் துறையைத் தழுவியது என்று கூறத் தமிழ் அறிஞர் தயங்கார். கம்பர் செஞ்சொல் கவி இன்பமாகச் சீதையைக் கொண்டு தமிழ் அகப் பொருள் சுவையை அவளும் இராமனும் அநுபவித்த தாகக் கூறுவது மகிழ்ச்சியை உண்டாக்குகின்ற தன்றோ ?

" நோக்கிய நோக்கெனும் நுதிகொள் வேலிணை
ஆக்கிய மதுகையான் தோளில் ஆழ்ந்தன ;
வீக்கிய கனைகழல் வீரன் செங்கணும்
தாக்கணங் கனையவள் தனத்தில் தைத்தவே."

—மிதிலைக் காட்சிப் படலம்

இங்ஙனம் கண்ணோடு கண்ணினைக் கவ்வி, உணர்வும் ஒன்றிட எதிரெதிர் கண்ணுற்று, " பருகிய பார்வை என்னும் கயிற்றால் கட்டி, ஒருவருடைய உள்ளத்தை மற்றவர் உள்ளம் இழுத்தலால், கட் டமைந்த வில்லை ஏந்திய அண்ணலும், வாள்போன்ற கண்களை உடைய நங்கையும் இருவரும் மாறிமாறி மற்றவர் இதயத்தில் குடிகொண்டனர்," என்பது கம்பர் அடுத்துக் கூறும் செய்தியாகும்.

" பருகிய நோக்கெனும் பாசத் தாற்பிணித்(து)
ஒருவரை ஒருவர்தம் உள்ளம் ஈர்த்தலால்
வரிசிலை அண்ணலும் வாட்கண் நங்கையும்
இருவரும் மாறிப்புக் கிதயம் எய்தினார் "

என்ற கம்பர் வாக்கில் மெய்க்காதலின் உண்மை நிகழ்ச்சியைத் தெளிவாகக் காணலாம். உண்மைக் காதலர் மாறிமாறி மற்றவர் இதயத்தே குடிகொள்வர். அவர்களே மெய்க்காதலர். அவர்களே தூய மன நிலையில் ஒருவரை ஒருவர் சந்தித்து இரண்டறக் கலப்பவர். இவ்வுண்மையை, அகப்பொருள் இலக் கணத்துக் காதலர் மாட்டுக் காணப்படுவது.

முதலில், கம்பர் காட்டும் காதலர் இருவர் கண்ணும் கவ்வின; பின்னர், உணர்வும் ஒன்றின; பின்னர், உள்ளமும், உள்ளமும் இழுக்க, இருவரும் தம் தம் தனி நிலை நீங்கிச் சேர்ந்தனர். ஆகவே, எஞ்சி நிற்பது உயிர் மாத்திரமே. அத்திறத்திலும், 'அவர்கள் ஒன்றுபட்ட உடலுக்கு உயிரும் ஒன்றே ஆயினர்,' என்று கம்பர் முடித்துவிட்டார்.

"மருங்கிலா நங்கையும்
வசையில் ஐயனும்
ஒருங்கிய இரண்டுடற்(கு)
உயிரொன் றாயினர்."

## சீதை தனித்து வருந்துதல்

கோசலக் குரிசில் சென்ற பின்னர், வைதேகி தன் உயிர் உடலில் தங்கப்பெருது துடித்தனள். அவளது நிறை என்னும் அங்குசம் நிமிர்ந்து போயது. அவள் குரிசிலின் பின்னே போன மனத்தைத் தன்பால் மீண்டும் இழுக்க ஆற்றல் அற்றவளாய்க் காதல் நோயால் நலிந்தாள். அவ்வளவில் அந்தி நேரம் வந்தது. அஃது அவளுக்குப் பூதம் போன்று இருந்தது. குளங்களாய நெருப்பிலே காய்த்து, மலரின் மணமாகிய விஷத்தைப் பூசிக்கொண்டு, உலவுகின்ற தென்றல் காற்று என்ற வேல், அனங்கன் எய்த அம்புகளால் உண்டான புண்களில் பாய, அதனுல் நலிகின்ற உணர்வும் அழகும் உருகிச் சோர்கின்ற சீதையின் உயிர் உண்ணும்படி விளங்கிய மாலை வானத்தை நோக்கி,

"யமனது உருவம் இதுதானோ?"

என்ருள்.

"கயங்கள் என்னும் கல்தோய்ந்து
கடிநாண் மயிரின் விடம்பூசி
இயங்கு தென்றல் மன்மதவேல்
எய்த புண்ணின் இடைநுழைய
உயங்கு முணர்வும் நன்னலமும்
உருகிச் சோர்வாள் உயிருண்ண
வயங்கு மாலை வானேக்கி
இதுவோ கூற்றின் வடிவென்ருள் !"

*—மிதிலைக் காட்சிப் படலம்*

இங்ஙனம் காதல் நோயால் அந்திக்கு ஆற்ருளாகிப் புலம்பிய வைதேகி, இருளைக் கண்டதும் மிக்க சோர்வடைந்தாள். "(கோசலக் குரிசிலின்) கரிய நிறத்தை என்போல் எல்லோரும் எண்ணுவதால், அவ்வண்ணத்தின் தொகுதிதான் இங்ஙனம் இருளாகப் பரந்ததோ!" என்று வியர்த்தாள்; பின்னர், அன்றில் கூவுவதற்கு ஆற்ருளாகி, "மன்மதன் என்னைத் துன்புறுத்த உன்னை ஏவினனே! அல்லது யான் செய்த தீவினையே அன்றில் என்னும் உருவோடு வந்தனையோ?" என்று கூறி வருந்தினுள்.

இருள் சென்ற பின்னர், தண்கதிரவன் இன்புறத் தோன்றினுன். இனபுறத் தோன்றிய மதியைத் தன்னைத் துன்புறுத்தத் தோன்றியதாக வைதேகி நினைத்தனள். அதற்கு அவள் ஆற்ருளாகி "அதிகப்படும் இருளாக வந்து உலகை விழுங்கி, மேன்மேலும் பருக்கின்ற பெரியதோர் நெருப்பினிடையே முளைத்த வெண்ணெருப்பே! நீ நீங்காத அழகு உடைய அவருக்கு (இராமனுக்கு) நிறத்திலே தோற்று ஒருபுறம் ஒதுங்கி ஏங்கிக் கிடக்கும் அலைகளை வீசும் கடலுக்கும் எனக்கும் கொடியை ஆனேயே! ஏன் இது ?" என்னும்

பொருளை அமைத்து,

"நீங்கா மாயை யவர்தமக்கு
நிறமே தோற்றுப் புறமேபோய்
ஏங்காக் கிடக்கும் எறிகடற்கும்
எனக்குங் கொடியை யானுயே!
ஓங்கா நின்ற இருளாய்வந்(து)
உலகை விழுங்கி மேன்மேலும்
வீங்கா நின்ற கருநெருப்பின்
இடையே எழுந்த வெண்ணெருப்பே."

—மிதிலைக் காட்சிப் படலம்

இவ்வாறு புலம்பிய சானகி, அன்னப் பறவை நெருப்பில் பட்டதுபோல் மலர்கள் அடர்ந்த சயனத்தில் புரண்டாள். இங்ஙனம் பலவாறு காதல் நோயால் நைந்து கூறிய வைதேகியின் நிலையை அருகே இருந்து கண்டவர்போல் கம்பர் இரக்கங்கொண்டு இயம்பும் கருத்து இனிமையை ஊட்டுகின்றது.

ஆகையால், "காதலால் விளையும் நோய்க்கு மருந்தும் உண்டோ?" எனக் கம்பர் கழிவிரக்கங் கொள்கின்றார்:

"வாச மென்கல வைக்களி வாரிமேல்
பூசப் பூசப் புலர்ந்து புழுங்கினள்;
வீச வீச வெதும்பினள் மென்முலை;
ஆசை நோய்க்கு மருந்துமுண் டாங்கொலோ!"

என்று காதல் நோய்க்குக் காதலரே மருந்தன்றி மலர்கள் முதலானவை மருந்தல்ல என்பதைக் கூறி, சீதைக்கு உபசாரம் செய்த தோழியரை நோக்கி நகுகின்றார்.

## இராமனது துன்ப நிலை

சீதையின் செய்தி இங்ஙனமாக, இராமன் கன்னியைக் கண்ட அன்றிரவு கண் துயின்றிலன். அந்நிலையைக் கம்பர்பிரான்,

> " ..................................இருள்
> கனியும் போல்பவன் கங்குலும் திங்களும்
> தனியும் தானுமத் தையலும் ஆயினான் "

என்று குறுநகைதோற்றக் கூறுகின்றார் ; 'இரவுண்டு, மதி உண்டு, தனிமையுண்டு, தானுண்டு' என்றிருந்தான் இராமன். அப்போது அவன் தன் அகத்தே குடிகொண்ட சானகியின் தோற்றம் தோன்றக் கண்டான்; கண்டு, "வானத்திலிருந்து பிரிந்த மின்னலின்உருவானது இங்ஙனம் பெண்ணின் நல்லழகைப் பெறுவது கூடுமோ? நான் அவ்வுருவத்தைக் கண்ணினுள்ளும் கருத்தினுள்ளும் காண்கின்றேன். இரண்டிற்தம் வேறுபாடு உணர்ந்திலேன்" என்று கூறி அயிர்த்தான்.

பின்னரும் இராமன், "அவள் என்பால் அருள் இலளாயினும், என் மனத்தில் அவள்மீது உண்டான காதலாலும், யாவரும் அஞ்சுதற்குக் காரணமான காமநோயைத் தருகின்ற விடம்போன்ற தன் விழிகளால் அவள் என்னை விழுங்கி இருப்பதாலும், தெளிவற்ற இவ்வுலகில் சராசரப் பொருள்கள் அனைத்தும் எனக்கு அவளது அழகிய உருவாகவே தோன்றலாயின," என்று மெய்க் காதலின் தத்துவத்தைக் கம்பர் இராமன் வாயிலாக நமக்கு விளக்குகிறார்.

> " அருளி லாள்எனி னும்மனத் தாசையால்
> வெருளி நோய்விடக் கண்ணின் விழுங்கலால்

தெருளி லாவுல கிற்சென்று நின்றுவாழ்
பொருளெ லாமவள் பொன்னுரு வானவே."

—மிதிலைக் காட்சிப் படலம்

இச் செய்யுளில், இராமன், 'அருள் இலாள்' என்று சீதையைக் கடிகின்றான். இஃது அர்த்தமற்ற தொடரே ஆகும். காதல் நோயால் நலியும் ஆண், பெண் புலம்பும் பழக்கமான சொற்களே இவை. சானகி எவ்வித அருளை இவன்மாட்டு அந்நிலையில் செய்தல் கூடும்? மணமாகாத முன்னர் இவனண்டை வந்து அவள் எங்ஙனம் அருள் சுரக்கக்கூடும்? இங்ஙனமே மறுநாள் சீதையும் பிதற்றுகின்றாள்; "மதனன் தன் நீண்ட வெற்றி வில்லால் என் நெஞ்சு அறியும் படி, பஞ்சை அழிக்கும் தீயைப்போல் என் ஆவியைப் பற்றக் கொடிய பாணங்களை எய்ய, அதனால் துன்புறும் மாதரை உய்ய வந்து, 'அஞ்சல், அஞ்சல்' என்று அபயம் அளிக்காத ஆண்மை என்ன ஆண்மையோ?" என்று தன்னை ஆட்கொள்ளாதிருக்கும் இராமனைக் கடிந்து கூறுகின்றாள்.

"பஞ்சரங்கு தீயினாவி பற்றியோடு கொற்றம்வாய்
வெஞ்சரங்கள் நெஞ்சரங்க வெய்யகாமன் எய்யவே
சஞ்சலங்க லந்தபோது தையலாரை உய்யவந்(து)
அஞ்சலஞ்சல் என்கிலாத ஆண்மைஎன்ன
ஆண்மையோ?"

—கார்முகப் படலம்

தாமரைப் பொய்கையிடையிருந்த மண்டபத்தில் வீற்றிருந்த வைதேகி, அங்கு இராமன் எதிர்வந்து தோன்றவில்லை என்று பழி கூறினாளே! இது காதலர்பால் தவழும் வெற்றுரை என்க.

இந்நிலையில் வைதேகி, வளர்ந்து உயர்ச்சி பெற்ற தன் கொங்கைகளை நோக்கி, "இளைத்தலின்றி மிகக் கொழுத்த கொங்கைகளே! நீங்கள் பருத்து விம்மி, என்ன பயனைப் பெற்றீர்? சந்திரன் போன்று முகத்தையுடையவரும் யாவராலும் வளைப்பதற்கு முடியாத வில் ஒன்றினைக் கையில் தாங்கிய சிங்கம் போன்றவருமாகிய அப்பெரு மகனது மார்பில் பொருந்தி அநுபவிக்கின்ற நலம் உங்களுக்கு வேண்டுமாயின், இவ்வாறு பருப்பதை விட்டு அதற்கு வேண்டிய தவங்களைச் செய்யுங்கள்," என்று கூறுவது, காதல் இன்பத்தைப் பெருக்கச் செய்கின்றது.

"இளைக்கலாத கொங்கைகாள்!
எழுந்துவிம்மி என்செய்தீர்?
முளைக்கலா மதிக்கொழுந்து
போலும்வாண் முகத்தினன்
வளைக்கலாத விற்கையாளி
வள்ளல்மார்பின் உள்ளுறத்
திளைக்கலாகு மாகிலான
செய்தவங்கள் செய்ம்மினே!"

—கார்முகப் படலம்



## முடிவுரை

திருமணத்தன்று முன்னாள் இரவிலும் காதலர் இருவரும் தனித்தனி இருந்து நோயால் நலிந்தனர். நம்பியும் துயின்றிலன், நங்கையும் துயின்றிலள். மறுநாள் திருமணம் இனிது நிறைவேறச் சீதை அவைக்கண் வந்தாள். ஆங்கே இருவரும் தத்தமக்கு இருந்த அன்பைக் கண்பார்வையால் அறிவித்துக்கொண்டு உள்ளம் மகிழ்ந்தனர். பின்னர்த் திருமணம் திருவுடன் நடந்தேறியது.

**கம்பர் திருப்பெயர் வாழ்க!**